# CHINTHAMANI.

**A HIGH CLASS TAMIL MONTHLY.**

*(Devoted mainly to the cause of Indian Women.)*

EDITED BY SISTER V. BALAMMAL.

**Vol. I.] October 1924. [No. 3**

श्रीशारदायै नमः ।



श्रीरामचन्द्र परब्रह्मणे नमः

# சிந்தாமணி.

## சுபோத ராம சரிதம்.

COMPOSED AND ANNOTATED BY

SISTER V. BALAMMAL

DAUGHTER OF

*Late Dr. A. R. VAIDYANATHA SASTRIAR, M. A., M. B. & C. M.*



### सुबोधराम चरिते

#### बालकाण्डः

एतच्छ्रुत्वा वचो राज्ञस्सुमन्त्रस्सचिवाग्रणीः ।
पुत्रार्थिनं तमाचष्ट भूपं देवरहस्यवित् ॥ ७ ॥

सचिवाग्रणीः முதன் மந்திரியும் देवरहस्यवित् தேவ ரஹசிய மறிந்தவருமாகிய सुमन्त्रः சுமந்திரர் राज्ञः அரசனுடைய एतत् இந்த वचः வார்த்தையை श्रुत्वा கேட்டு पुत्रार्थिनं புத்திரனை விரும்பும் तं அந்த भूपं அரசனை (நோக்கி) आचष्ट உரைத்தார்.

अलं राजन्विषादेन द्रुतं शान्ताकुटुम्बिनम् ।
ऋष्यशृङ्गमिहानाय्य क्रियतां भवताऽध्वरः ॥ ८ ॥

राजन् அரசனே इह இப்பொழுது विषादेन துக்கித்தல் अलं போதும். शान्ताकुटुम्बिनम् சாந்தையை மனைவியாகப் படைத்துள்ள ऋश्यशृंगं கலைக்கோட்டு முனிவரை द्रुतं சீக்கிரமாக आनाय्य வரவழைத்து भवता உம்மால் अध्वरः யாகம் क्रियतां செய்யப்படட்டும்

तेन संलप्स्यसे पुत्रान्सर्वलोकसुखप्रदान् ।
इत्यमात्यवचः श्रुत्वा नृपो हृष्टस्तमानयत् ॥ ९ ॥

तेन யாகம் செய்வதினாலே सर्वलोकसुखप्रदान् சகல லோகங்களுக்கும் நன்மை விளைவிக்கக்கூடிய पुत्रान् பிள்ளைகளை संलप्स्यसे அடையப் போகிறீர். इति இவ்வாறு अमात्यवचः மந்திரியின் வார்த்தையை श्रुत्वा கேட்டு नृपः அரசன் हृष्टः சந்தோஷித்தவராக तं அந்த கலைக்கோட்டு முனிவரை आनयत् வரவழைத்தார்.

अथो वसिष्ठमाचार्यं विभण्डकसुतं तथा ।
पुरस्कृत्य क्रतुं कर्तुमारेभे भूपतिस्तदा ॥ १० ॥

अथो பிற்பாடு भूपतिः தசரதர் आचार्यं குல குருவான वसिष्ठं வசிஷ்டரையும் तथा அப்படியே विभण्डकसुतं கலைக்கோட்டு முனிவரையும் पुरस्कृत्य முன் வைத்து तदा அப்பொழுது क्रतुं யாகத்தை कर्तुं செய்வதற்கு आरेभे ஆரம்பித்தார்.

(To be continued.)

ஸ்ரீராம ஜயம்.

# சிந்தாமணி

தமிழ் நாட்டுப் பெண்மணிகளின் முன்னேற்றத்தை முக்கிய
மாகக்கொண்டு வெளிவரும் ஓர் உயர்தர மாதாந்தத் தமிழ் பத்திரிகை.

பத்திராதிபர் சகோதரி வி. பாலம்மாள்.

மலர் I.] அக்டோபர் 1924. [இதழ் 3.

## பெண்மக்கட்குரிய படிப்பு.

தற்காலக் கல்வி நிலைமையை நன்கு சீர்தூக்கி நோக்குங்கால் இத்தகைய கல்வியால் இந்தியப் பெண்மணிகள் முன்னேற்றமடைய முடியாமலிருப்பது பற்றி இனிப் பெண் சமூகத்திற்கு எத்தகைய கல்விப்பயிற்சி யளித்தல் நன்மை பயக்குமென்பதையே ஸ்திரீவித்யாபிமானிகள் ஆராய்ச்சி செய்யக் கடமைப்பட்டிருக்கிறார்கள். ஆடவர்களின் கல்விப் பயிற்சியிலேயே அபிப்பிராய பேதங்கள் தலை காட்டும் இச்சமயம் பெண் மக்களின் வித்தியாப்பியாஸம் இவ்விதம் தானிருக்கவேண்டுமென்று தீர்மானிக்கப்படல் மெத்த அவசரமாயும் அத்தியாவசியமாயு மிருக்கிறது. ஆடவர்களைப்போல் பெண் மக்களும் சில நவீனத் துறையில் தங்குதடையின்றிச் சென்று பிறகு தாங்களாகவேசீர் திருந்தக்கூடுமானாலும் அக்காலத்தை எதிர்பார்த்து இருத்தல் சாத்தியமல்ல, பெண்சமூகத்தில் ஒரு சிலருக்கு அறைகுறையாக உபயோகப்படக்கூடிய தற்காலக் கல்வியைப் பெண்கல்வியென பொதுவாய்க் கூறமுடியாது. பெண் சமூகத்திற்கே உபயோகமாயுள்ள கல்விப் பயிற்சி இனி சற்றும் தாமதமின்றி இந்தியாவில் நிலைநாட்டப்படாமல் போகுமானால் நமது எதிர்கால சந்ததிகளுக்கு நாம் நல்வழி காட்டியவர்களாகமாட்டோம். ஆண் பெண் இருபாலார்களுடையவும் தற்கால ஸ்திதியையும் எதிர்கால நிலைமையையும் யோசித்துப் பெண்மக்கட்குரிய படிப்பு என்பதை இந்தியாவில் இச்சமயம் ஸ்திரப்படுத்துதல் தீர்க்க தரிசனத்துள்ள சிறந்த காரியங்களில் ஒன்றாகும். ஆடவர்களுக்குத் தேசியக் கல்வி என்றால் என்ன அர்த்தம் என்று பலகேள்விகள் உண்டாவது போலவே பெண் மக்கட்குரிய படிப்பு என்பதும் ஆரம்பத்தில் பலருக்கு வியப்பை உண்டாக்கக்கூடும். ஆனாலும் பெண்மக்கட்குரிய

படிப்பு இன்னதென்று விளக்கப்பட்டுவிடும் பக்ஷத்தில் படித்தவர், படியாதவர், கிராமவாசிகள், நகரவாசிகள் அனைவர்களுடைய ஆதரவையும் ஏககாலத்தில் அடைந்து மிக விரைவில் விருத்தியடைந்து விடுவதில் சந்தேகமே இல்லை. பெண் மக்கட்குரிய படிப்பு இன்னதென்பதை ஆராய்வோம். நாகரிகத்திற்கும், நற்போதனைக்கும், நன்னடக்கைக்கும், ஒப்புயர்வற்ற [செல்வத்திற்கும், உயர்ந்த நிலைக்கும் இருப்பிடமாக நம் இந்திய நாடு வாழ்ந்து வந்ததென்பதை அயல் நாட்டாரும், சரித்திரக்காரர்களும், பூர்வகிரந்தங்களும் இதிகாசபுராணங்களும் ஒப்புக்கொண்ட விஷயம். ஒருநாடானது கல்வியிலும், செல்வத்திலும், தைரியத்திலும், வீரத்தன்மையிலும் சிறந்து விளங்கவேண்டுமானால் அந்நாட்டிலுள்ள பெண்மணிகள் வீரத்தாய்மாராகவும் கற்றறிந்தவர்களாகவும் இருந்திருத்தல் அவசியம். கிருக தேவதைகளாயும் குடும்ப அதிகாரிகளாயும் இருப்பதினாலேயே பெண்மக்கள் இந்தியாவில் தெய்வமெனப் போற்றப்படுகிறார்கள். குடும்பவாழ்க்கையிலும், இம்மை மறுமைக்குரிய சிறந்த வழிகளிலும், தேசாபிமானத்திலும், தேசோபகாரத்திலும் பெருந்தன்மையுடன் தமது வாழ்நாளைச் செலவிடும் இந்தியப் பெண்மணிகள் கற்றறிந்தவர்களாயும் கவியரசிகளாயும் விளங்கி வந்தார்களென்பதை மறுக்கவே முடியாது. அவர்கள் கற்றறிந்த கல்வியைத்தான் இச்சமயம் பெண்மக்கட்குரிய படிப்பு என்று பெயரிட்டு அதை நிலைநிறுத்த வேண்டிய சந்தர்ப்பமும் ஏற்பட்டிருக்கிறது. தேச முன்னேற்றத்திற்குத் தேசாசாரமாகிற அஸ்திவாரத்தின்மீது சீர் குலைந்திருக்கும் மேற்கட்டடங்களை சீர்படுத்துதலே சீர்திருத்தமெனப்படும். இதர நாடுகளின் விஷயமும் பழக்கவழக்கங்களும் புதிய சீர்திருத்த முறைகளும் எவ்விதமிருந்தபோதிலும் இந்தியர்கள் பூர்வீக வழியை அறவே ஒழிப்பதனால் தாம் முன்னேற்றமடைய முடியாதென்பதை நன்குணர வாரம்பித்திருக்கின்றனர். இக்காரணம் பற்றியும் இச்சமயத்திலேயே பெண்மக்கட்குரிய படிப்பை நாம் ஏற்படுத்தாவிடில் தேசமுன்னேற்றத்துடன் பெண்மக்களின் எதிர்கால வாழ்க்கையிலுள்ள உன்னத இலக்ஷியங்களும் உருக்குலைவுற்றுவிடுதல் நிச்சயம். ஆரம்பக்கல்வி என்றும், கட்டாய இலவசக் கல்வி என்றும், தேசியக் கல்வி என்றும் ஏற்படவிருக்கும் இந்த நற்சமயத்தில் பெண்மக்கட்குரிய படிப்பு இன்னதென்பதை எடுத்துக் காட்டல் இன்றியமையாததாகும்.

இந்தியப் பெண்மணிகள் படித்து உத்தியோகம் செய்து அதனாலேயே காலக்ஷேபம் செய்யவேண்டுமென்ற நிர்ப்பந்தத்தை இன்றுவரை அடைந்ததில்லை. தற்காலம் ஆங்காங்கு நம் பெண்கள் ஜீவனத்திற்குக் கஷ்டப்பட நேரிட்டிருப்பது அவர்கள் தற்பொழுதிய கல்வியைக் கல்லாமையினாலல்ல. ஆடவர்களுடைய அநாவசியப் படிப்பும், அயல் நாட்டு நாகரிகமும், ஆடம்பர வாழ்க்கையும் அறியாமையும் கெட்ட பழக்க வழக்கங்களுமே இந்தியப் பெண்கள் ஜீவனோபாயத்தில் கஷ்டப்படும்படியான நிலைமையை ஏற்படுத்தி யிருக்கின்றன. இந்தியாவில் ஒரு குடும்பத்தில் பெண் குழந்தை பிறக்குமானால் அதன் வாழ்நாள் சீரும் சிறப்புமாகக் கழியவேண்டுமென்று பிரார்த்திப்பார்களன்றி, அப்பெண்ணின் அந்தஸ்து இத்தகையதாகவே இருக்க வேண்டுமென்று நிச்சயிப்பதில்லை. உயர்ந்த உப்பரிகையில் வாழ்வதானாலும் ஏழைக்குடிசையில் இருக்க நேருமானாலும் அப்பெண் சந்தோஷமாயும், சமாதானமாயும், பொறுமையுடனும், அடக்க வணக்கத்துடனும், உள்ளன்புடனும், உயர்ந்த நோக்கத்துடனும் பிறந்த விடம் புகுந்த வீடு இரண்டிற்கும் மேன்மை

தரக்கூடிய வழியில் வாழவேண்டுமென்பதே நம் பெற்றோர்களின் பூரண லக்ஷியமாயிருக்கிறது. இத்தகைய சிறந்த நோக்கத்துடன் வளர்க்கப்படும் பெண்மகள் உலக வாழ்க்கையில் அன்னியோன்னிய தாம்பத்தியத் தன்மையில் தன் காலத்தைச் சந்தோஷமாகக் கழிக்கக்கூடிய ஆற்றலையடைந்து விடுகிறாள். ஒருகால் துரதிருஷ்ட வசத்தால் குடும்ப வாழ்க்கையும் கணவன் வீட்டு ஆதரவும் இவளுக்குக் கிடைக்காமல் தன் பிறந்த வீட்டிலேயே காலங் கழிக்கக் கூடியநிலைமை ஏற்பட்டுவிட்டாலும், இவளால் பிறந்த குடும்பத்திற்குச் சிரமம் ஏற்படுவதில்லை. தன்னுடன் பிறந்த சகோதர சகோதரிகள் தன்னைக் காட்டிலும் சிறியவர்களானாலும் பெரியவர்களாயிருப்பினும் அவர்களுடைய க்ஷேமலாபங்களைக் கவனித்து நடந்து கொள்ளக்கூடிய தன்மை இவளுக் கேற்பட்டுவிடுகிறது. சுயநலம் மறுத்தல், பரிசுத்த நடவடிக்கை, எளியவரிடத்தனுதாபம் இத்தகைய மேற்குணங்களுடன் பழகும் இந்தியப் பெண்மணியானவள் தேசகைங்கரியத்தில் தன் வாழ்நாளைச் செலவிட நேர்ந்தாலும், நினைத்தாலும் அவ்வழியிலும் மேன்மையுற்று விளங்கக்கூடுமென்பதில் ஆக்ஷேபமுண்டா? இக்காரணங்களால் நமது பெண்மக்கள் தயவு, தாக்ஷிணியம், பரோபகாரம், பச்சாத்தாபம், பொறுமை, பணிவு, திருப்தி, எந்நிலையிலும் பொறுப்பு, பிறர் மதிக்கத்தக்க நடவடிக்கை இவ்வித தத்துவங்களையே முக்கிய லக்ஷியமாகக் கொண்டு வளர்க்கப்படுவதால் பெற்றோர்களின் லக்ஷியத்திற்கும் சுயமரியாதைக்கும் சற்றும் குறைவின்றி ஆதரவு காட்டக் கூடியதுதான் பெண் மக்கட்குரிய படிப்பு எனப்படும். நாகரிக வழியையோ அல்லது சௌகரியத்தையோ அனுசரித்துப் பெண்களின் விவாக வயது இப்போதைக்காட்டிலும் சற்று சீர்திருத்தப்பட்டாலும் அதிகரிக்கப்பட்டாலும் ஒரு பெண் உற்சாகத்துடன் கவலை, கூச்சம் இவைகளன்றிக் கல்வி பயிலக்கூடிய வயது பனிரண்டுதான். கணவன் சம்மதத்தினாலோ அல்லது சுயத் தீர்மானத்தாலோ தனக்குள்ள சௌகரியத்தாலோ ஒரு பெண் உயர்தரக் கல்வியைக் கற்க முன் வருவாளானால் அதற்கும் அஸ்திவாரமாகப் பனிரண்டு வயதிற்குள் கற்பதே பெண்மக்கட்குரிய படிப்பு எனப்படும். கஷ்ட காலத்தில் நல் வழியில் ஜீவிப்பதற்கும், சுகமாயிருக்குங்கால் பிறரிடத்தில் இரக்கத்துடன் நடந்து கொள்ளக்கூடிய தன்மையையும் போதிப்பதே பெண்மக்கட்குரிய படிப்பு எனப்படும். பெண்கள் படிக்கக்கூடிய வயது ஏழு வயதிலிருந்து பனிரண்டு வயதளவேயாகும். இதற்கிடையில் இவர்கள் தம் தாய்மார்களுடன் கூடவிருந்து குடும்பகாரியங்களிலும் சற்று பழகுதலும் அவசியமே. "கண் கண்டது கை செய்யும்" என்ற கூரியபுத்திப் போக்கையுடைய குழந்தைப் பருவமிருந்தே பெண்கள் குடும்ப காரியங்களில் பழகாமற் போவார்களாயின் "செடியில் வளையாதது மரமாகி வளையாது" என்ற பழமொழிக்காளாய் விடவும்கூடும். சுயமாகக் குடும்பகாரியங்களில் அனுபவமற்ற பெண்கள் வேலையாட்களை வைத்துக் குடும்பம் நடத்தக்கூடிய திறமையை அடைவது முடியாத விஷயம். இவ்வாறு படிப்பு, வீட்டுவேலை இரண்டிலும் பெண்கள் பயிற்சியடையக்கூடிய காலம் ஏழு முதல் பனிரண்டு வயதளவாகவே இருப்பதால் இவர்கள் படிக்கும் நேரமும் பாடங்களும் வேறுவிதமாக இருத்தல் முக்கியம். சுய பாஷையைப் பிழையின்றி நன்றாக எழுதவும் படிக்கவும், கணக்கில் வாய்ப்பாடு, கூட்டல், கழித்தல் போன்றவைகளை நன்றாய் அறிந்து கொள்ளவும், சங்கிதத்தில் வாய்ப்பாட்டுக்களை அபசுவரமின்றிப் பாடவும், தையல் வேலை

களைச் செய்யவும் இவ்வைந்து வருஷகாலத்தில் பெண்கள் தக்க பயிற்சி யடையச் செய்வது கஷ்டமன்று. பள்ளிக்கூட நேரங்களையும் பகல் இரண்டு மணியிலிருந்து மாலை ஐந்து மணிவரை என்று ஏற்படுத்தல் வேண்டும். இவ்விதம் பெண்மக்கட் குரிய படிப்பு புகட்டப் படுமானால் சிறுமிகள் குடும்ப காரியங்களிலும், சுயபாஷையிலும், சங்கிதத்திலும், தையல் முதலிய உபயோகத் தொழிலிலும் ஒருங்கே தேர்ச்சியடைந்து விடுவார்கள். இதனால் கட்டாய இலவசக் கல்விக்கு ஆக்ஷேபங்களேற்படாமல் சாதகமும் ஆதரவும் கிடைத்து விடுவதிலும் தடையே இல்லை.

மேற்கூறிய முறையே பெண்களுக்குப் பூர்த்தியான ஆரம்பப் படிப்பாகும். இதற்கடுத்து, அதாவது பனிரண்டு வயதிற்குமேல், கணவன் அநுமதியாலோ, அல்லது பெற்றோர்களின் முயற்சியாலோ படிக்க விரும்பும் பெண்களுக்கு இவ்வாரம்பப் படிப்பு அஸ்திவாரம் போன்றதாகும். பனிரண்டு வயதிற்குமேல் குடும்ப நிர்வாகத்திலேயே ஈடுபடக்கூடிய பெண்களும் ஏற்கனவே சுயபாஷையில் நன்கு படித்திருப்பதால் உயர்தரக் கிரந்தங்களைப் படிக்கவும் உலக விசேஷங்களைப் பத்திரிகைகள்மூலம் அறிந்து கொள்ளவும் கூடும். ஒழிந்த நேரங்களில் வீட்டிலிருந்தபடியே மேன்மேலும் நல்ல கிரந்தங்களைப்படிப்பதால் தமது குழந்தைகளுக்குக் கற்றுக்கொடுக்கக்கூடிய நிலைமையையும் இவர்கள் எளிதில் அடைந்து விடுவார்கள். மேற்கண்டவாறு ஆரம்பக் கல்வியில் தேர்ச்சி பெற்ற பெண்கள் ஒருகால் தற்கால உயர்தரப் பெண் கல்வி கற்கவிரும்பினாலும் ஏற்கனவே ஒரு பாஷையில் தேர்ச்சியடைந்திருப்பதால் வேறு பாஷைகளைக் கற்பதும் சுலபமாகவே இருக்கும். பெண்ணின் பெற்றோர்களும் இத்தகைய ஆரம்பப் படிப்பினால் தம் குழந்தைக்குத் தாம் எவ்வளவு தூரம் கல்வியில் பயிற்சி கொடுக்க முடியுமோ அவ்வளவையும் பூரணமாய்க் கொடுத்துவிட்டதாகவும் திருப்தியடைவார்கள்.

இப்பெண்ணுக்குக் கிடைக்கக்கூடிய புருஷன் முழு மூடனாக ஏற்பட்டாலும் இவளை ஏன் சுயபாஷையைப் படித்தாயென்று இகழ முடியாது. நாகரிகத்தோரணை யுள்ளவனும் இப்பெண்ணைப் படித்தறியாத முட்டாளென்று இளக்காரம் செய்யமாட்டான். பெண்மகள் அதிசீக்கிரத்தில் குடும்ப வாழ்க்கையிலீடுபட்டுச் சுக சந்தோஷத்துடன் தனது வாழ்நாளைக்கழிப்பதைக்கண்டுகளிப்பதையே தமது முக்கிய நோக்கமாகக் கொண்டிருக்கும் பெற்றோர்களால் இதைக் காட்டிலும் சிறப்பாக வேறொரு கல்வியைப் பெண் குழந்தைகளுக்குப் புகட்டுதல் சாத்தியமில்லை என்பதே நமது அபிப்பிராயம். தவிர அரசாங்கத்தினால் ஏற்படுத்தப்படும் கல்விப்பயிற்சியானது அனைவர்களுக்கும் உபயோகமான வழியிலிருக்கவேண்டுமல்லாது ஒரு சிலருக்கு மெத்த சிரமத்துடன் அரைகுறையாக உபயோகப்படக்கூடிய கல்விஸ்தாபனங்களில் சிறிதளவு சிரத்தை எடுத்துக் கொள்வதனாலேயே பெண்கல்வியை அபிவிருத்தி செய்து விடுவதாகக் கல்வி இலாகா நினைப்பதும் சரியல்ல. ஆண் பெண் இரு வகுப்பினருக்கும் ஒரேவிதமான கல்வியை யளிப்பதே சமத்துவத்திற்கும் உபயோகத்திற்கும் ஏற்றதென்று நினைப்பதும் சரியல்ல. ஏழைகளாயினும் அவர்கள் நிலைமைக்கேற்றவாறு வரிப்பணம் வசூலிக்கும் அரசாங்கமானது ஏழைப் பெண் மக்களுக்கும் உபயோகப்படக்கூடிய கல்விமுறையை ஸ்தாபிக்கக் கடமைப்பட்டிருக்கிறது. நகர சபைகளிலும் சட்ட சபைகளிலும் தாங்கள் அமரும் சமயத்தில் பெரும்பாலும் பெண்மக்களின் வாக்குரிமையை (வோட்) யே எதிர்பார்க்க வேண்டியவர்

களாயிருக்கும் ஜனப்பிரதிநிதிகள் பெண்மக்கட்குரிய படிப்பைப் பற்றி இனியேனும் சிரத்தை எடுத்து அரசாங்கத்திற்கு இவ்விஷயத்திலுள்ள பொறுப்பை எடுத்துக் காட்டித் தம்கள் கடமையைச் செய்வதில் கக்ஷி பிரதி கக்ஷி விவகாரங்களை விடுத்து ஏகமனதுடன் சிரத்தை எடுப்பார்களென்று நம்புகிறோம்.

பத்திராதிபர்.

# ஜப்பானின் நாகரிகம்.

ஜப்பான் இராஜ நீதியிலும், பவுதீக விக்கியான சாஸ்திரங்களிலும் வெகுவாக முன்னேற்ற மடைந்திருக்கும் மேல்நாடாகிய ஐரோப்பிய தேசத்திற்குச் சமானமாய் இருக்கிறது. ஆனல் அவர்களுடைய நாட்டில் நடக்கும் நடவடிக்கைகளும், சில ரீதியும், அவர்களுடைய விசித்திரமான கற்பனைகளும் தேச முன்னேற்றத்திற்கு ஒவ்வும்படியாய் இல்லை. இருப்பினும் அவர்கள்தேசமுன்னேற்ற மடையச்செய்யும் முயற்சிகளில் சற்றும் பின் தயங்கினவர்களாகத் தோன்றவில்லை.

இவ்விஷயத்தை நம்முடைய ஜன்ம பூமியாகிய பரத கண்டத்தின் முன்னேற்றத்திற்கு நம்முடைய பழக்கவழக்கங்கள் தடைசெய்கின்றதென்று சொல்லுகின்ற தலைவர்கள் நன்கு கவனிக்கவேண்டும்.

ஜப்பான் தேசத்துச் சகோதரிகள் கர்ப்பிணியாய் இருக்கும் பொழுது சில கர்ப்ப சடங்குகள் செய்கின்றார்கள். அது நம் நாட்டாருக்கு விசித்திரமாய்த் தோன்றலாம். அதாவது, தகப்பனுடைய வெள்ளை சிவப்புச் சட்டையினுடைய கைகளைக் கத்தரித்து இரண்டையும் முடித்து அதை அரைக்கச்சை (பெல்ட்) மாதிரி அந்தக் கர்ப்பிணியின் வயிற்றில் கட்டுகிறார்கள். குழந்தை பிறந்த பிறகு அந்த வெள்ளைத்துணியை வேறாக எடுத்துச் சாயக்காரனிடம் கொடுத்து நீலச்சாயம் போட்டுக் கொண்டுவந்து அதைக் குழந்தையின் வயிற்றின்மேல் போர்த்தப்படுகிறது. அந்தத் துணிக்குச் சாயம்போடும் சாயக்காரனுக்கு மதுவும் சில உணவுப் பொருள்களும் சேர்த்துப் பெரிய ஆடம்பரத்துடன் சீராகக் கொடுக்கப்படுகின்றன. குழந்தைகள் பிறக்கு முன்னரே சுமார் 10 அல்லது 12 உடுப்புகள் அக்குழந்தைக்குத் தயார் செய்து வைத்து விடுகின்றார்கள். குழந்தைக்கு 75 அல்லது 120-ம் நாள் ஆனவுடன் அந்தத் துணிகளெல்லாம் களையப்பட்டு வேறு புது உடுப்புக்கள் தைத்துக் கொடுக்கப்படுகின்றன. குழந்தை பிறந்த 4-வது மாதக் கடைசியை அல்லது 120-வது நாளை மிக சுபதினமாக நினைத்து நோன்பு செய்து கொண்டாடப்படுகிறது. அன்றைய தினம் அக்குழந்தைக்கு 'அன்னபிராசனமும்' 'மதுப்பிராசனமும்' செய்யப்படுகின்றன. அதாவது சாதமும் மயக்கம் தரக்கூடிய 'பீர்' என்கிற ஒருவகை மதுவும் ஊட்டப்படுகின்றன. பிறந்த குழந்தை ஆணாய் இருந்தால் வீட்டிலிருக்கும் வயதில் முதிர்ந்த புருஷர் ஒருவர் மேற்குறித்த உணவை அளிப்பார். குழந்தை பெண்ணாய் இருந்தால் குடும்பத்திலுள்ள பெரிய ஸ்திரீகள் மேற்படி வேலையைச் செய்ய முற்படுவார்கள். இந்தச் சாதம் ஊட்டும் சமயத்தில் குழந்தைக்கு "உப்புக்கண்டம்" என்ற உப்பினால் தயாரிக்கப்பட்ட மீன் தினுசுகளை குழந்தையினுடைய உற்றார்கள் சீராக அளிப்பார்கள்.

இந்த விதி முடிந்த பிறகு குழந்தையை மொட்டை அடிக்கிறார்கள். மூன்று வருஷம் வரைக்கும் மொட்டை அடிப்பது அவர்களுடைய வழக்கமாய் இருக்கிறது. பிறகு மூன்றிலிருந்து பத்து வருடம் வரைக்கும் உச்சித்தலை மயிரை மாத்திரம் எடுக்கிறார்கள். குழந்தைக்குப் பத்து ஆண்டு நிறைந்து விட்டால் பிறகு அவரவர்களிஷ்டப்படி மயிர் வைத்துக் கொள்ள ஆக்ஷேபம் கிடையாது.

மேலும் குழந்தைக்கு 3 வருஷம் 11 மாதம் 5 நாள் ஆனதும் "சமூகாராஹாகாமா" என்று பெயருடைய சல்லடத்தோடு கூடிய சட்டை ஒன்றைக் குழந்தைக்குப் பரிசாகக் கொடுக்கிறார்கள். இந்த உடுப்பின் மேல் மூன்று சித்திரங்கள் வரையப்பட்டிருக்கும். அவற்றில் ஆமையின் சித்திரம் ஒன்று. அது அக்குழந்தையின் தீர்க்காயுசைக் காட்டும் ஓர் அறிகுறியாம். இரண்டாவதாக மூங்கிற் கொத்து ஒன்று. மூன்றாவதாகப் பனைமரம் ஒன்று. இவ்விரு சித்திரங்களும் அக்குழந்தைக்கு நல்ல ஸ்வபாவம், பிரியம், சிரத்தை, நிஷ்டை, புத்திக்கூர்மை ஆகிய இவைகளை உண்டுபண்ணக் கூடியனவென்று அன்னார்களுடைய சித்தாந்தம்.

அன்றியும் குழந்தை பிறந்த 7-வது நாள் வீட்டிலுள்ள ஸ்திரீ புருஷர்களுடைய சம்மதத்தின் பேரில் குழந்தைக்கு நாமகரணம் செய்கிறார்கள். அது ஆணாய் இருந்தால், மலை, ஆறு முதலிய இயற்கைப் பெயரிட்டு அழைக்கின்றனர். பெண் குழந்தையாயிருந்தால், அழகிய புஷ்பம், மெல்லிய கொடி, ருது முதலிய மனோரம்மியமான பெயரிட்டழைக்கின்றார்கள். அப்பெயர்கள் அவர்களுடைய இயற்கை அழகைக் காட்டக்கூடியதாய் இருக்கிறது. இப்பெயர்கள் குழந்தையின் 15-வது வருஷத்தோடு முடிவடைந்து 15-வது வருஷப் பிறப்புதினத்தில் அவரவர்களுடைய ஜன்மம் வரைக்கும் நீடித்திருக்கும்படியான ஓர் ஸ்திரமான பெயரிட்டு விடுகின்றார்கள். அந்த ஸ்திரமான நாமகரணஞ் செய்யும் தினத்தன்று ஓர் பெரிய பண்டிகை நடத்துவது அவர்கள் வழக்கமாய் இருக்கின்றது. இந்த சமயத்தில்தான் ஜப்பானில் புருஷாள் அணியும்படியான "கிமோனு" என்கிற ஆடையை அணிய ஆரம்பிக்கிறார்கள்.

## விவாகம்.

கலியாணம் என்பது ஜப்பானில் தார்மீக நடவடிக்கைகளில் ஒன்றாக நினைக்கப் படுவதில்லை. 'மேஜலி' என்ற சீர்திருத்த விதி ஏற்படும் முன்னர் ஜப்பானியருள் புருஷன் பெண் சாதிகள் தங்களுக்குள் இருக்கவேண்டிய முறையும் நீதியும் இன்னதென்று உணராமலே இருந்தார்கள். 'மேஜலி' என்கிற சீர்திருத்த விதி ஏற்பட்ட பிறகு கூட மேல்நாட்டாரின் நாகரிகப்படி கலியாண ரிஜிஸ்தரில் தங்கள் பெயரை எழுதிக்கொடுப்பதைத் தவிரக் கலியாண முறை நீதியை அறிந்து கொண்டவர்களாகச் சற்றும் புலப்படவில்லை. ரிஜிஸ்திரார் முன் புதுக்கலியாண தம்பதிகளை அறிமுகம் செய்ய வருகின்றவன் கலியாணமானவனாயிருக்கவேண்டும்; அவன் தன் சம்சாரத்துடன் கூட அங்கு ஆஜராக இருக்கவேண்டும். மாப்பிள்ளை பெண்ணிற்கு உப்புக்கண்டமும் சமுத்திரக் கரையோரத்தில் வளரும் ஒரு விதமான கோரையும் சீராய் அனுப்ப வேண்டியது அவரது கடமை.

கலியாணப் பெண் கலியாணத்திற்காகத் தன் தாயார் வீட்டைவிட்டுப் புருஷனில்லத்திற்குத் தனிமையாக அந்திப்பொழுதில் இருள் சூழ்ந்தபின் புறப்படுவது வழக்கம். அப்படி அவள் தன் கலியாணத்திற்குச் செல்லும் பொழுது, தலையிலிருந்து பாதம் வரையில்

ஒரே வெளுப்பான துணியை மேற்போர்வையாகப் போர்த்துக்கொண்டு போகிருள். கலியாணப்பெண் வீட்டிலுள்ள பேற்றோர்கள் அன்று சாயந்திரம் அந்தப் பெண் வீட்டை விட்டுச் செல்லும் வரையில் அன்னுகாரம் உட்கொள்ளாமலும் வீட்டிலுள்ள பண்டங்களைத்தீண்டாமலும் இருப்பார்கள். அவள் புறப்பட்டுச் சென்ற பிறகு அவள் சென்ற வழியை முதலில் அலம்பி, வீட்டை செவ்வனே சுத்திசெய்து, பிறகு வீட்டிலக்கினியுண்டாக்கி, ஓர் இறந்த வீட்டில் பிணத்தைத் தூக்கிக் கொண்டு போன பிறகு எந்த மாதிரியான கிரியைகளும் சடங்குகளும் நடக்குமோ அம்மாதிரியான சில கிரியைகளும் சடங்குகளும் அச்சமயத்தில் செய்யப்படுகின்றன. இச்சடங்குகளெல்லாம் முடிந்த பிற்பாடுதான் தாய் வீட்டுக்காரர்கள் சமயல் செய்து சாப்பிடுவார்கள்.

வாக்கு நிச்சயம் (Betrothal) நடந்த பிறகு சுமார் இரண்டு மாதங்களில் கலியாணம் நடக்கிறது. அதற்கிடையில் மாப்பிள்ளையானவன் பெண்ணின் பிரீதியைச் சம்பாதிப்பதில் காலத்தைக் கழிக்கிருன். ஜப்பானில் பெண்ணுக்கு 16 வயதும், புருஷனுக்கு 25 வயதும் ஆனல்தான் பிறகு அவர்கள் கலியாணத்திற்கு உரித்தானவர்கள் என்று அவர்களுடைய விதியில் ஒப்புக் கொள்ளப்பட்டிருக்கிறது. இவ்வயதிற்குமேல் கலியாணத்திற்குப் பெற்றோர்களின் அனுமதி கூட அவசியமில்லை. அதற்கு முன்னல் செய்யவேண்டியிருந்தால் பெற்றோர்களின் அனுமதியின் பிரகாரந்தான் செய்யவேண்டி வரும். ஆனல் ஜப்பானில் அநேகமாய் பெண்ணுக்கு 20-வது வருஷத்திலும் புருஷனுக்கு 25-வது வருஷத்திலுந்தான் கலியாணம் செய்ய முற்படுகிருர்கள்.

கலியாணம் பிள்ளை வீட்டில்தான் நடப்பது அவர்களுடைய வழக்கம் என்பதை முன்னமே நாம் சொல்லியிருக்கிறோம். பெண் தன் கலியாணத்திற்குத் தன் கணவன் இல்லம் வருவதற்கு முன் அவள் அணிய உயர்ந்த உடுப்புக்கள் அவளிடம் அனுப்பப்படுகின்றன. மதுபானம் செய்வது கலியாணத்தின் ஓர் முக்கிய அம்சமாகக் கொண்டாடுகிருர்கள். மேலும் அவர்கள் அக்கினியை மூட்டி அதற்கு முன் கலியாண மணைபோட்டு அதன் மேல் தம்பதிகளை உட்கார வைக்கிருர்கள். அவர்களுக்கு எதிர்புறத்தில் பாணிக்கிரஹணம் செய்து கொடுக்கிற புருஷனும் பெண்சாதியும் உட்காருகிருர்கள். அவர்கள் இருவரும் இந்தக் கலியாண தம்பதிகளுடைய ஒவ்வொரு கையை முறையே பிடித்துக் கொண்டிருப்பார்கள். கலியாண தம்பதிகள் மற்றொரு கையில் ஒரு கோப்பையை வைத்துக் கொண்டிருப்பார்கள். இதற்கு இடையில் வாயிற்படி வழியிலிருந்து, ஒரு சிறு பையனும் ஒரு சிறு பெண்மணியும் விசித்திரமான விலை உயர்ந்த அழகான ஆடை அணிகளைத் தரித்துக்கொண்டு அவர்களுடைய கையில் ஒரு பாண்டத்தில் மதுவை எடுத்துக் கொண்டு உள்ளே பிரவேசித்து அந்தக் கலியாண தம்பதிகளிடம் நெருங்கி வந்து அவர்கள் கையில் ஏந்தியிருக்கும் கோப்பையில் மூன்று தடவை மதுவை வார்ப்பார்கள். அத்தேசத்து வழக்கப்படி அப்பொழுது அச்சிறு பையனை பக்ஷிவர்க்கங்களின் பிரதிநிதி யென்றும் அச்சிறு பெண்மணியை புஷ்ப ஜாதிகளின் பிரதிநிதி என்றும் குறிப்பாகக் கொண்டாடுவது அவர்களது வழக்கமாயிருக்கின்றது. இந்த மதுவை உட்கொண்டு விட்டால் கலியாணம் முற்றிலும் முடிந்து விட்டதாக அவர்கள் கருதுகின்றுர்கள். இதற்கிடையில் கலியாணத்திற்கென வந்திருக்கும் உற்றர், உறவினர், விருந்தினர் இவர்களனைவரும்யதேச்சயாய் மதுவை உட்கொண்டு மதுவெறி பிடித்தலைவார்கள்.

கலியாணமான பிறகு மாப்பிள்ளை ஒரு தடவை மாமனார் வீட்டிற்குப் போவார். அப்பொழுது அவருக்குப் பெரிய விருந்தளிக்கப்படுகிறது. பெண்ணிற்குக் கலியாணமான பிறகு அவள் தாயார் வீட்டிற்கு அகாரணமாகப்போவதில்லை. பிள்ளை ஒருக்கால் தன் தகப்பனருக்கு மூத்த குமாரனாக இருந்தால்தான் தன் சம்சாரத்துடன் தகப்பனார் வீட்டில் இருக்கக்கூடும். அப்படிக்கில்லாமல் தகப்பனருக்கு நடுவிலன் அல்லது கடைசிக் குமாரனாக விருந்தால் அவன் கலியாணம் ஆனவுடன் தன் சம்சாரத்துடன் வேறு இல்லத்தை அடையவேண்டி வருகிறது. ஏனெனில் ஜப்பானியர்களுடைய சட்டப்படி தகப்பனுடைய சொத்தானது மூத்த குமாரனுக்குத்தான் முழுதும் போய்ச் சேரும்.

ஜப்பானியர்களுக்குள் இரண்டு மூன்று பெண்சாதிகளை ஏக காலத்தில் குடும்பத்தில் வைத்துக்கொள்வது வழக்கமில்லை. ஆனால் அவர்கள் வீட்டிலேயே ஏக காலத்தில் 2, 3 விலைமாதர்களை வைத்துக் கொள்வது கௌரவக்குறைவல்லவென்று கருதுகின்றனர். மிகச் சமீபகாலத்தினின்று பிற நாட்டாருடைய நாகரிகத்தை அறிந்த சில குடும்பங்களில் இக்கொடிய வழக்கமானது கண்டனம் செய்து தடுக்கப்பட்டு வருகிறது.

ஜப்பானிய தேசத்தில் கலியாணம் கீழ் நாட்டு நாகரிகப்படி மேள தாளம் முதலிய ஆடம்பரத்துடன் நடைபெறுவதில்லை. அவ்வாறே விவாக பந்தவிலக்கும் (அதாவது பெண்சாதியை விட்டுவிடுவது) யாதொரு ஆடம்பரமன்றியே நடத்தப்படுகிறது. சம்சாரம் ரோகியாக இருந்தாலும், அவளுக்குப் பிள்ளை பிறக்காவிட்டாலும், அவள் மாமியார் பேச்சைக் கேளாவிட்டாலும், புருஷனுக்குக் கீழ்ப்படிந்து நடக்காவிடினும், இன்னும் இது போன்ற சிற்சில காரணங்களை முன்னிட்டும் அவ்வில்லறத்தினின்றும் விலக்க அவர்களுடைய விதி இடம் தருகிறது. ஆனால் ஜப்பானில் விபசாரத்திற்கு விசேஷமான தோஷம் கிடையாது.

ஜப்பானில் விதவா புனர்விவாகம் நடக்கிறது. ஆனால் சம்சார மிழந்த புருஷன் விதவை ஸ்திரீகளுக்குள் ஒருத்தியையே தன் பெண்சாதியாகப் பொறுக்கி எடுக்கிறான்.

## தலைபின்னல்.

கூந்தலை அழகாகப்பின்னுகின்ற விஷயத்தில் ஜப்பான் ஸ்திரீகளுக்குச் சமானமாக உலகத்தில் எவரும் இலர் என்று உறுதியாகக் கூறலாம். அவர்களுடைய பின்னலில் சுமார் 54 விதம் இருக்கிறது. ஜப்பானிய ஸ்திரீகள் அநேகமாகத் தலை ஸ்நானம் செய்வது கிடையாது. ஆனால் அனுதினமும் குளிப்பதுண்டு. நேர்த்தியானதமான அவர்களது பின்னலானது சுமார் 10, 15 நாள் இருந்தாலும் அப்பொழுதே தலை வாரிப்பின்னப்பட்டதுபோல் காணப்படுகிறது. அவர்கள் இராக்காலங்களில் படுக்கும்பொழுது தலைக்குக்கீழ் தலையணை வைத்துக்கொண்டால் பின்னல் நெகிழ்ந்து போகும் என்கிற உத்தேசத்தால் தலையணையை உபயோகிப்பதில்லை. ஆனால் தலையணைக்குப் பதிலாய் மரத்துச் சட்டத்தினால் தயாரிக்கப்பட்ட "முகரா" என்கிற ஒரு கட்டையைத் தலைக்கு அணையாக வைத்துக் கொள்கிறார்கள். ஜப்பானிய ஸ்திரீகள் 10-வது வருஷத்திலிருந்து இதே அப்பியாசம் செய்து வருகிறார்களாகையால் அவர்களுக்கு, இவ்வழக்கம் சகஜமாகி விடுகிறது.

## தேவதா பூஜை.

ஜப்பான் தேசத்து ஜனங்கள் நரி, பூனை, பாம்பு, ஆமை முதலிய ஜீவஜந்துக்களைத் தேவதைகளாகக் கொண்டாடி அவைகளைத்

தங்கள் கடவுளெனப் பூஜிக்கிறார்கள். பூனைகள் மனுஷ உருவத்தை வேண்டுமானால் எடுத்துக் கொள்ளும் சக்தியுடையனவென்று ஜப்பானிய ரெல்லோரும் நினைக்கிறார்கள். ஆகையால் மனித உருவமெடுக்கும்போது நிர்ப்பந்தமா யிராவண்ணம் பூனையினுடைய வால் கத்தரிக் கப்படுகிறது. இறந்த மனிதனுடைய ஆத்மா மரம், புல், மலை முதலியவைகளில் வசிக்கிற தென்று ஜப்பானியர்கள் நினைக்கிறார்கள். ஆகையால் நிலங்களிலிருந்து மரம், மூங்கில், புல் முதலியவைகளை வெட்டும் பொழுது அதி லிருக்கும் ஆத்மாவைப் பிரார்த்தித்துக்கொண்டு வெட்டுகிறார்கள். நரி ஜப்பானியருடைய பூஜைக்கு ஆதிதேவதையாகக் கொண்டாடப் படுகிறது. இது ஸம்பத்தின் ஆதிதேவதை என்றும் நினைக்கப்படுகிறது. ஒவ்வொரு வீட்டிலும் பூஜாக்ருகத்தில் நரியின் உருவம் வைத்துப் பூஜிக்கப்படுகிறது. மேலும் ஜப் பானியர்கள் தங்களுக்கு நரி ஆதிதேவதை யானதைக் குறித்து அடியிற்கண்ட கதை யொன்றைச் சொல்லுகிறார்கள்.

ஒரு நாள் சில ஜப்பானியர்கள் ஒரு காட் டின்வழியாகச் சென்று கொண்டிருந்தார்கள். அப்பொழுது அவர்கள் ஒரு நரிக்குட்டியை கண்ணுற்றார்கள். கண்டதும் அதைப் பிடித் துக்கொன்று தின்ன முயன்றார்கள். இவ்வாறு அவர்கள் செய்வதைக் கண்ணுற்ற அவ்வழி சென்ற தனவந்தரொருவர் இரக்கப் பட்டு அந்நரிக்குட்டியை விலை கொடுத்து வாங்கிப் பிறகு கொஞ்ச தூரம் சென்று அதன் கட்டை யவிழ்த்து எதேச்சையாய் விட்டு விடவே அந் நரிக்குட்டி மிகுந்த சந்தோஷத்துடன் தன் தாய் தந்தையை யணுகியது. இது இவ் வாறு இருக்க மேற்குறித்த தனவந்தனுக்கு ஒரே குழந்தையுண்டு. அக்குழந்தையை நா ளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்த்து வந்தார்கள். அக்குழந்தைக்குத் திடீரென ஓர் கடுநோய் கண்டது. அத்தன வந்தன் தக்க வைத்தியர்களைக் கொண்டு வியா தியைக் கவனித்துப்பார்த்ததில் குழந்தைக்குப் பூர்ண சொஸ்தமாகவேண்டுமானால் நரியின் மூளையைப் பக்குவப்படுத்திக் கொடுத்தால் தான் வியாதி நிவர்த்தியாகு மென்று சொன் னார்கள். பிறகு அத்தனவந்தர் அநேக ஆட் களை அனுப்பி அதிக பிரயாசைப்பட்டும் காடுகளில் ஒரு நரி கூட அகப்படவில்லை. அன்று இரவு அக்குழந்தையின் தகப்பனார் மிகவும் துக்கப்பட்டுக்கொண்டு தூக்கம் வரா மல் தம் பிள்ளையின் ஞாபகமாகவே இருந் தார். இவ்வாறு அவஸ்தைப் பட்டுக்கொண் டிருக்கையில் நடுநிசியில் ஒரு மனிதன் தோன்றி நரியின் மூளையை அத்தனவந்த னிடம் கொடுத்து ஆசீர்வதித்து மறைந்தான். பிறகு அந்த நரியின் மூளையால் தயாரிக்கப் பட்ட மருந்தைத் தன் புதல்வனுக்குக்கொடுக்க வியாதி சொஸ்தமாகிக் குணமடைந்தான். சில நாள் சென்ற பிறகு அந்நரி மூளையை யார் கொண்டுவந்து கொடுத்தார் என்று ஆலோசிக் கும் சமயத்தில், காட்டில் கண்ணுற்ற நரிக் குட்டியின் கிழத் தாய்தந்தைகள் அத்தன வந்தனுடைய கனவில் அணுகி "ஐயா! கொஞ்ச தினங்களுக்கு முன் எங்களுடைய வயறறில் பிறந்த குட்டியைக் கொல்ல யெத்த னித்தவர்களிடமிருந்து அதைக் காப்பாற்றி எங்களிடம் சேர்த்த உபகாரத்திற்காக உம் புதல்வனை அக்கொடிய வியாதியின்றும் காப் பாற்ற அன்றைக்கு நரியின் மூளையை நாங்க ளே உமக்களித்தோம்" என்று சொல்லின. பிறகு இச்சமாசாரத்தைக் கேட்ட அனைவரும் ஆச்சரியப்பட்டுக் கடவுளே இவ்வாறு வந்து உன்பிள்ளையைக் காப்பாற்றினார் என்று சொன் னார்கள். ஆகையால்அன்றைய தினத்திலிருந்து ஜப்பானியர்கள் நரியை ஓர் கடவுளாகக் கருதி அதற்கு பூஜை முதலாயின செய்து கொண் டாடுகிறார்கள்.—கன்யா சிக்ஷக.

—

# ஜெபுன்னிஸா.

தேச சேவை என்றால் அது விறகு வெட்டுதல், பாரம் சுமத்தல், கிணறு தோண்டுதல், மரமேறுதல் முதலிய சிரம சாத்தியமான வேலைகளைப்போல் ஒன்று என்றும், அவ்வரிய தொண்டு புரிய ஆடவரில்கூட ஒரு சிலரே தகுதியல்லாது பொதுவாக ஆண் பெண் இருவகுப்பினரும் அதில் ச்ரத்தை யெடுத்துக் கொள்ள வேண்டுமென்று ஓலமிடுதல் வீண் என்றும், அதிலும் ஆடவ சமூகத்திற்கே கைக்கொள்ள அசாத்தியமாயிருக்கும் இத்தேச சேவையை நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு முதலிய நாற்குணங்கள் இயற்கையாயமைந்துள்ள நம் தமிழ் நாட்டு ஸ்திரிகளும் அநுஷ்டிக்க வேண்டுமெனக் கூறல் வீண் பிதற்றல் என்றும், இது சாஸ்திர சம்மதமல்லவென்றும் இவ்விதப் பற்பல அபிப்பிராயங்கள் தற்போது நம் நாட்டிலுலாவி வருகின்றனவென்பது சகலருமறிந்த விஷயமே. "தீர்மான சித்தத்திற்குத் தடையேகிடையாது" "முயற்சியுடையோர் இகழ்ச்சி யடையார்" (Where there is a will, there is a way) என்னும் பழமொழிகளுண்டு. அதைக் கைப்பற்றி ஒவ்வொருவரும் அவரவர் நிலைமைக்குத்தக்கபடித் தங்களாலியன்ற தேசத்தொண்டை செய்தே தீர்வது என்ற மன உறுதியுடன் முன் வருவார்களானால், பல துளி பெருவெள்ள மென்பது போல சீக்கிரத்தில் நன்மை பயக்கும் என்ற கொள்கையை ஆண் பெண் இருபாலரும் தம் மனதில் வேரூன்றச் செய்துகொள்ள வேண்டும். சௌகரியமும், சாத்தியமுமான வழியில் தம் தாய் நாட்டிற்கு ஊழியம் செய்ய வேண்டியது முக்கியக்கடமை என்றுதான் நாம் மேற்கண்ட ஆக்ஷேபங்களுக்குச் சமாதானம் கூறலாம். சாஸ்திர சம்மதமல்ல வென்று யோசனைக் குறைவால் ஆக்ஷேபிப்பவர்களுக்கு அவர்கள் தீர ஆராய்ச்சி செய்யாத நம் சாஸ்திரங்களிலிருந்தே தக்க பதில் அளிக்கலாம். "என் கடன் பணி செய்து கிடப்பதே. எல்லோரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே அல்லாது வேறொன்றறியேன் பராபரமே" நம்மைப்பெற்றெடுத்த தாயை நாம் எப்படிப் பயம், பக்தி, விசுவாசத்துடன் போற்றுகிறோமோ, எப்படி அவ்விஷயத்தில் சிரமத்தையும் சௌகரியத்தையும்பாராது ச்ரத்தையுடன் நடந்து கொள்கிறோமோ, அவ்விதமே நம்ஜன்மபூமியை நாம் பல விதத்திலும் போற்றிப் பணிசெய்யக் கடமைப்பட்டிருக்கின்றோமென்பது "தாய் நாடு" என்று அது பூண்டபெயரினாலேயே நன்கு விளங்குகின்றது. இக்கடமையை நம்மனதில் ஊன்றச் செய்யும் பொருட்டே, நாம் அநுஷ்டிக்கும் ஒவ்வொரு சாஸ்திரீயக் கிரியைகளிலும் சங்கல்ப பூர்வமாக நமது பரதகண்டத்தின் பெருமையானது விஸ்தாரமாகக் கூறப்பட்டிருக்கிறது. இவைகளையெல்லாம் யோசிக்குமிடத்து, தேச சேவை என்பது பரிமாணமுள்ள ஒரு வஸ்து வல்லவென்பதும், அதற்கு ஒரு அளவு மில்லையென்பதும், எல்லாரும் தங்களாலியன்றவளவு தேசத்தொண்டு புரிய முடியுமென்பதும் நன்கு விளங்கும். மந்திரியாயிருப்பவன் தன் யோசனையினாலும், சேனாதிபதியாயிருப்பவன் தன் தைரியத்தாலும், சேனைகள் தங்கள் வீரத்தாலும், தொழிலாளர் தம் தேகபலத்தாலும் சாமர்த்தியத்தாலும், இவ்வாறு அவரவர் தமது சக்திக்கும் நிலைமைக்கும் தக்கவாறுதானே தேசத்தொண்டு புரியக் காண்கின்றோம். அவ்வாறே தம் புருஷர்களைத் தேசத் தொண்டு புரியத் தூண்டுவதினாலும், தம் பெண்களைக் கல்வி

யிலும் அறிவிலும் சிறக்கச் செய்வதினாலும், தம் பிள்ளைகளைத் தர்மம், சத்தியம், நன்னடக்கை இவைகளில் ஆர்வமுள்ளவர்களாகப் பழக்குவதினாலும், குடும்பக் காரியங்களை முறைதவறாது நடத்துவதினாலும் நம் நாட்டு ஸ்திரீகள் தேச ஊழியம் செய்பவராவார்கள். தேசத்தொண்டு பெண்மணிகளிட மிருந்தே ஆரம்பிக்கின்றது. குடும்பத்தைச் சரிவர நிர்வகிப்பதால் அதற்குரிய தேவைகள் உணவும் அவைகளைப் பெற முயற்சித்து நடத்தப்படும் காரியங்களே தேசஊழியத்தின் படிக்கட்டுக்களெனலாம். இஷ்டமித்திர பந்துக்களடங்கியதே குடும்பமெனப்படுமாதலால் தேசமென்ற பெரிய குடும்பத்தில் தேசமக்களனைவரு மடங்கியிருக்கிறார்கள் என்பதையுணர்தல் தேசத்தொண்டாகும். இத்தகைய தேசாபிமானத்தால் பெண்மக்கள் தூண்டப்படும் காலத்தில் தங்களுக்குள்ள நிர்ப்பந்தங்களால் பாதிக்கப்படுவதில்லை என்பதை அடியிற் காணும் மாதரசியின் சரித்திரம் தெளிவித்தல் பற்றி நமது சகோதரிகள் ஊன்றிப் படித்து நன்குணர்ந்து கொள்ளலவசியம். (ப.-ர்)

***

இப்பாதகண்டத்தில் வசிக்கும் எல்லா மானிடர்களுக்கும் தங்களுடைய தாய் நாட்டின் மீது மிகுந்த அன்பு உண்டென்றும் அப்படி அன்பில்லாத மானிடரே இருக்க முடியாதென்றும் நம்முடைய சாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ளது. (जननी जन्मभूमिश्च स्वर्गादपि गरीयसी) தாயும் ஜன்ம பூமியும் ஸ்வர்க்கத்தைக் காட்டிலும் உத்கிருஷ்டமானது என்று கூறப்பட்டிருக்கிறது. எனவே தம் தாய் நாட்டின் நன்மைக்காக ஸ்திரீ புருஷர்கள் இருவரும் மனமார உழைக்கக் கடமைப்பட்டிருக்கிறார்கள்.

நம் தமிழ் நாட்டு ஸ்திரீகள் தங்களால் தாய் நாட்டிற்கு யாது செய்யமுடியும் என்றும், தாங்கள் எப்பொழுதும் புருஷர்களுடைய ஆதீனத்திலேயே இருப்பதால் தங்களால் அவர்களைப் போல் பகிரங்கமாக வேலை செய்ய முடியாமல் இருக்கிறதென்றும் வீண்வாதம் செய்ய முற்படுகின்றார்கள். வாஸ்தவத்தில் அவர்களது நிலைமை அவர்களுடைய ஆழ்ந்த உத்தேசத்திற்கு விரோதமாய் இருந்தாலும் அதைத் தங்களுக்கு அனுகூலமாக்கிக் கொள்வதிலேயே தங்கள் கவலையைச் செலுத்தவேண்டும். மேலும் இப் பெண்மணிகள் பெரும்பாலும் காரியத்தைச் செய்து முடிக்க முயற்சிக்க வேண்டும்.

மேற்கூறிய காரணங்களால் ஸ்திரீகள் தங்களால் தங்களுடைய தாய் நாட்டிற்கு உழைக்க முடியாமல் இருக்கிறது என்று குறை கூற இடம் தருகிறது. மேலும் ஸ்திரீ புருஷர்கள் அவரவர்கள் நிலைமைக்குத் தகுந்தபடி தங்கள் தாய் நாட்டிற்கு ஊழியம் செய்யத் தகுந்தவர்கள்தான் என்ற நம்பிக்கையுடன் இருக்கவேண்டும். எக்காரணத்தைக் கொண்டும் தமது தாய் நாட்டை வெறுப்பது நியாயமல்ல.

ஒருவன் தன்தாய் நாட்டிற்கு எதனால் நன்மை உண்டாகுமென்றும், எதனால் கெடுதல் உண்டாகுமென்றும், எதனால் உயர்ந்த நிலையுண்டாகுமென்றும், எதனால் தாய் நாட்டின் குறைகளை நீக்க முடியுமென்றும், எத்தகைய காரியங்களால் சுய நலம் கருதாமல் முடிக்க முடியுமென்றும் ஆராய்ந்தறிய வேண்டும். சாதாரணமாக மிருகவர்க்கங்கள் கூட நம் தாய் நாட்டின் நன்மைக்கும் செழிப்புக்கும் ஒரு காரணபூதக் கருவியாய் இருக்கின்றனவென்பதை நாம் அனைவரும் ஒப்புக்கொள்ளவேண்டியிருக்கிறது. இது இவ்வாறிருக்க, உயர்ந்த மானிட ஜென்மம் எடுத்தும் நமது சரீரத்தில் பாதியாய் மதிக்கத்தகும் ஸ்திரீகள் மாத்திரம் தாழ்ந்த நிலைமையில் இருந்தால் எவ்வாறு தேசம் உன்னத நிலைமையை அடையும்?

இவ்விஷயத்தைக் குறித்து இதைப் படிக்கும் ஒவ்வொருவரும் நன்றாய் ஆலோசிக்க வேண்டும். முக்கியமாக நமது தமிழ் நாட்டுச் சகோதரிகள் இதை நன்றாகக் கவனிக்க வேண்டும். தமிழ்நாட்டு ஸ்திரீகளைவிட மிக நிர்ப்பந்தமான ஸ்திதியிலுள்ள ஹிந்துஸ்தான் ராஜஸ்திரீகளில் ஒருவர் தம்முடைய தாய் நாட்டின் முன்னேற்றத்திற்காக அரும்பாடுபட்ட அன்னாருடைய சரித்திரத்தைச் சற்று இங்கு விவரிப்போம்.

16-வது நூற்றாண்டில் நமது தேசத்தை ஆண்டுவந்த மொகலாய சக்கிரவர்த்தியாகிய அவரங்கஜீபிற்கு "தில்ரஸயானு" என்ற நற்குணமுள்ள மனைவி வாய்த்தாள். அக்குணவதியின் வயற்றில் கி. பி. 1636-ம் வருஷத்தில் ஓர் அழகிய பெண் பிறந்தாள். அக்குழந்தையின் பெயர் ஜேபுன்னிஸா. அவள் தாயார் அம்பர் தேசத்தின் மகாராஜாவின் புத்திரி ஆகையால் இக்குழந்தையை வளர்ப்பதற்காக "மையாபாயி" என்ற ஓர் ராஜபுத்திர ஸ்திரீயை செவிலித் தாயாக நியமித்தார். அந்த மையாபாயி தெய்வ பக்தி, நுண்ணறிவு, பராக்கிரமம் முதலிய குணங்கள் வாய்க்கப் பெற்றவள். அவள் தன்னுடைய நற்குண நற்செய்கைகள் யாவற்றையும் ஜேபுன்னிஸாவின் மனதில் பசுமரத்தாணிபோல் பதியுமாறு செய்தாள். அவ்வாறு புகட்டியதின் பயனை பின்வரும் கதையினால் அறியலாம். ஜேபுன்னிஸா சக்கிரவர்த்தியின் மகளாக இருந்தபோதிலும், தனது செவிலித்தாயினிடம் பயபக்தி விசுவாஸ விநயத்துடன் அவளது ஆணையை மீறி நடவாது இருந்து வந்தாள்.

ஜேபுன்னிஸா தன் 7-வது வயதில் கல்வி கற்க ஆரம்பித்தாள். அவளுக்குக் கல்வி கற்பிக்க 'மரியம்' என்ற மகா பண்டிதை நியமிக்கப்பட்டாள். அந்த அம்மை குரான் என்ற மகிமையுள்ள தர்மநூலை நன்றாகக் கற்றுத் தேர்ந்தவளாதலின் அவளுக்கு அரசன் "ஹபீஜா" என்ற பட்டத்தைக் கொடுத்தான். மரியம் எப்படிச்சிறந்த ஞாபகசக்தியுடையவளாகச்சிறந்து விளங்கினளோ, அவ்வாறே ஜேப்புன்னிஸாவும் மிகுந்த ஞாபக சக்தியுடையவளாய் அவளுக்குச் சிறந்த சிஷ்யையாய் விளங்கினள். அவள் குரானைக் கசடறக் கற்றுக் குரானிலுள்ள "ஆயத்" (ஸ்லோகம்) களைத் தனது இனிமையான மெல்லியகுரலில் பாடும்பொழுது கேட்பவர் மனம் பரவசமாகி உருகா நிற்பர்.

மேலும், இவள் குரானைக் கற்றுணர்ந்தபிறகு தான் மற்றக் கல்விகளைக் கற்கத் தொடங்கினள். ஞாபக சக்தி வாய்ந்தவளாதலின் சிறிது காலத்திற்குள்ளாகவே பார்சி, அரபி முதலிய பாஷைகளில் நன்கு தேர்ந்தவளானள்.

அன்றியும் மிகத் தெளிவாகவும் அழகாகவும் ஒழுங்காகவும் எழுத்துக்களை முத்துக்கோர்த்ததுபோல் எழுதுவாள். எழுதுவதில் அக்காலத்தில் இவளுக்கு நிகரானவர்கள் யாவருமிலர் எனப் பெயர் படைத்தாள்.

பின்னும் அவள் இளம்பிராயத்திலேயே கவன சக்தி பெற்றிருந்தாள். அவள் தனது காலத்தின் பெரும் பாகத்தை ஸாஹித்திய ஆராய்ச்சியிலும், இயற்கை அழகை கவனிப்பதிலும் கழித்து வந்தாள். அவள் தனக்கருகிலுள்ள டாம்பீகத்திலும் தூர்ச்செய்கையிலும் ஈடுபட்டிருக்கும் ஜனங்களை வெறுத்தாள். தான் இல்லறதர்மத்தைமேற்கொண்டால் மற்றவர்களைப் போலவே சம்சாரதுக்கத்தில் உழன்று வருந்தவேண்டிவருமென்று நினைத்து ராஜகுமாரியாய் யௌவன சுகத்தை அடைவதற்கு வேண்டியபொருள்கள் அனைத்தையும் உடையவளாக இருந்தும் சம்சார சாகரத்தில் கிடந்துழலாமலும் தன்னை மணப்பதற்கென்று வந்த அநேக அரசிளங்குமாரர்களையும் வெறுத்தவளாகித் தேசத்தின் பொது நன்மையையே நாடினவளாக மனம் கசிந்து நின்றாள்.

அன்றியும் இராஜ போகத்திற்கு வேண்டிய சகல சௌகரியங்களிருந்தும், அவளுடைய தகப்பனர் அவளுடைய செலவிற்காக வருஷத்திற்கு நான்கு லக்ஷரூபாய் கொடுத்துக்கொண்டு வந்தார். அவ்வாசிளங்குமரி இந்த ரூபாய்களை அனுவசியமான வழிகளில் செலவழிக்காமல் அநேக வித்வான்களோடு நெருங்கிப் பழகி வந்ததினுல் அத்திரவியத்தைக் குறிப்பிட்ட தக்க வித்வான்களுக்குப் பரிசு வழங்கிவந்தாள். இதிலிருந்து அன்னுளுடைய வித்வத்திறமையும் பக்தியும் வெளிப்படுகிறது. இவளால் அநேக வித்வான்களும் கல்விமான்களும் மேன்மை அடைந்தார்கள்.

மேலும், இந்த ராஜகுமாரி டில்லியில் ஒரு பெரிய கட்டடம் கட்டி அதில் ஒரு புஸ்தக சாலையை ஏற்படுத்தினுள். அவளுள்ளவரையில் அக்கட்டடத்தில் எப்பொழுதும் அநேக பண்டிதர்கள் குழுமிக் கொண்டும், அநேக புஸ்தகங்கள் எழுதிக்கொண்டும், சிலர் அழகான செய்யுளை கவனம் பண்ணிக்கொண்டும், மற்றும் சிலர் பல புஸ்தகங்களை மொழி பெயர்த்துக்கொண்டும், இவ்வாறு பெரும்பாலும் பண்டிதர்கள் தங்கள் காலத்தை வித்வத்துலகத்தில் செலவழித்துக்கொண்டு வந்தார்கள். அச்சமயத்தில்தான் ஸமஸ்கிருத பாஷையையும் ராஜ நீதியையும் ஜேபுன்னிஸா கற்றுக் கொண்டாள்.

அக்காலத்தில் பத்திரிகைகள், அச்சுக்கூடங்கள் முதலிய சாதனங்கள் இருக்கவில்லை. மேலும் ஒரு புஸ்தகத்தைச் சேகரிப்பதென்றால் அளவற்ற பிரயாசையும், காலதாமதமும், இடையூர்களும் ஏற்படுவது சகஜமாக இருந்தது. ஆனபோதிலும், ஜேபுன்னிஸா இதைச்சற்றும் சட்டை செய்யாமல் அளவற்ற தனங்களை வாரி இறைத்துத் தேசத்தில் பல இடங்களில் சஞ்சரிக்கும் பல பண்டிதர்களிடம் ஆள்களை அனுப்பி அவர்களால் இயற்றப்பட்ட பல அரிய நூல்களுக்கு அதிக விலை கொடுத்து அந்நூல்களைக் கொணர்ந்து தன் வாசக சாலையை நிரப்பினுள். மேலும் பண்டிதர்களுடைய அநேக அருமையான அபிப்பிராயங்களை ஒருங்கு திரட்டி வித்வத்துலகம் ஆச்சரியப்படும்படி புஸ்தக ரூபமாக வெளியிட்டாள்.

வெகு புராதன காலத்திலிருந்து "காச்மீரம்" ஒரு வித்யாபீடம் என்று உலகத்தில் பிரசித்தி பெற்றது. சங்கர ராமானுஜ மாத்வாசாரியார் போன்ற பெரிய மகான்களுக்கும் தக்க சமயத்தில் சமய சஞ்சீவிபோல் இக்காச்மீரம் அரிய நூல்களால் உதவியது உலகப்பிரசித்தம். தற்காலத்திலும் பிரசித்தி பெற்ற சில இடங்களில் கூட கிடைக்கப் பெருத அரிய நூல்கள் காச்மீரத்தில் வெகு சுலபமாக அகப்படுமென்பது புஸ்தக ஆராய்ச்சி செய்யும் சங்கத்தாரின் சித்தாந்தம். ஆகையால்ஜேபுன்னிஸா காச்மீரத்தில் சில பண்டிதர்களை புஸ்தகம் எழுத நியமித்திருந்தாள். அவர்களில் ஜோனராஜ், பூஷண், முல்லா முஹமத் சாபி இவர்கள் முக்கியமானவர்கள்.

எவ்வாறு கீர்த்திபெற்ற முகலாய ஸாம்ராஜ்ஜியம் சிதறுண்டு ஒரு சிறிய சரித்திர புத்தகத்தில் அடங்கி விட்டதோ அவ்வாறே ஜேபுன்னிஸாவின் இக்கீர்த்திபெற்ற புத்தகசாலையும் சரித்திர புத்தகத்தின் சில பக்கங்களில் அடங்கி விட்டது. ஆனுல் அப்புத்தகசாலையின் ஒரு ஜாப்தா புத்தகம் (catalogue) ஒன்று பூனுவிலுள்ள "ரீசர்ச் இன்ஸ்டிட்யூட்டில்" இருக்கிறது. இதனுல் அவளுடைய புத்தகசாலையில் எவ்வளவு நூல்கள் இருந்தனவென்று தெளிவாகிறது. பூனுவில் ஜேபுன்னிஸாவினுல் இயற்றப்பட்ட "ஜேபுத்தபாசிர்" என்ற மற்றெரு புத்தகம் இருக்கிறது. அனேகமாய் இயற்கைக் கவிவாணர்கள் உதாரகுணம் படைத்தவர்களாக இருப்பார்கள். அக்குணம் ஜேபுன்னிஸாவிடம் சிறந்து விளங்கியது. ஒரு தடவை அவள்

லக்ஷக்கணக்கான ரூபாய் செலவழித்துலாகூரில் ஓர் அழகிய உத்தியானவனத்தை உண்டாக்கினான். ஒருநாள் அந்த உத்தியானவனத்தைப் பார்வையிடச்செல்லும்பொழுது, சிலர் அவ்வனத்தில் என்ன செய்யப் போகிறாய் என்று கேட்க, அதற்கு ஜேபுன்னிஸா வனத்தின் வாசலில் யாரைக் காண்கின்றேனோ அவருக்கு அதைப் பரிசாக அளிக்கப்போகின்றேன் என்று தெரிவித்தாள். இது இவ்வாறு இருக்க, தெய்வ வசத்தால் ஓர் வித்வான் அத்தோட்டத்தின் வாயிலில் நிற்கக் கண்டு அவருக்கு அந்தத் தோட்டத்தைப் பரிசாக அளித்து விட்டு அப்படியே தன் இல்லம் திரும்பினாள். இப்பொழுதும் அந்த உத்தியானவனத்திற்கு "பூர் ஜிவாலாபாக்" என்று பெயர். அத்தோட்டத்தின் கீழ் சிம்மத்துவாரத்தின் சுவரிலுள்ள சலவைக் கல்லொன்றில் மேற்கண்ட விஷயங்களை விஸ்தாரமாய் பார்சி பாஷையில் எழுதி இருப்பதை இப்பொழுதும் காணலாம்.

தவிர அவுரங்கஜீப் சிக்கலான எந்த ராஜீய விஷயத்தையும் ஜேபுன்னிஸாவைக் கேழ்காமலோ, அவள் தெரிவிக்கிற அபிப்பிராயத்திற்கு மாறாகவோ செய்ய முற்படுவதில்லை என்று அவுரங்கஜீபின் சரித்திரத்தின் பல பாகங்களிலிருந்து நன்கு வெளியாகின்றது. உதாரணமாக கி. பி. 1666-ம் வருஷத்தில் சத்திரபதி ஸ்ரீசிவாஜி மகாராஜா டில்லிக்கு விஜயஞ் செய்தபொழுது சேனாதிபதியாயிருந்த "சாஸ்தகானின்" மனைவியின் தூண்டுதலின்பேரில் அவுரங்கஜீப் தம் எதிரியாகிய சிவாஜியை மோசம் செய்து கொல்ல முயன்றபொழுது ஜேபுன்னிஸா தன் தகப்பனாகிய அவுரங்கஜீபை இத்தகைய காரியம் செய்வதினின்றும் விலக்கிச் சிறந்த புத்திமதிகள் கூறி ராமசிங்கு என்கின்ற ஒரு ராஜபுத்திர வீரர் மூலமாய் சிவாஜி மகாராஜாவை தப்பவைக்கும்படி செய்வித்தாள். அவுரங்கஜீப்புக்குப் பிறந்தவளாயினும் அவளிடம் சிறிதேனும் மூரப்பான குணமில்லாமல் தர்ம சிந்தனையும், சகல ஜனங்களிடத்திலும் அன்பும் பொருந்தினவளாய் இருந்தாள்.

அவுரங்கஜீப் ஒரு விதத்தில் பிடிவாதக்காரரென்றுதான் சொல்லவேண்டும். தாம் செய்கின்ற ஒவ்வொரு விஷயத்திலும் அவருக்கு ஆழ்ந்த நம்பிக்கையுண்டு. ஆனால் அவருடைய அபிப்பிராயத்திற்கு விரோதமாக எவராவது தோன்றினால்அவன் அவுரங்கஜீபின் அளவிலா கோபத்திற்கு உள்ளாக வேண்டிவரும்.

அன்றியும், அவுரங்கஜீபுக்குத் தம்முடைய மகளிடத்தில் மிகுந்த அன்பு உண்டென்று அன்னாருடைய சரித்திரங்களினின்று நன்கு புலப்படுகிறது.

கி.பி. 1680-ல் அவுரங்கஜீபின் பிள்ளையாகிய 'அக்பர்' என்பவன் ராஜ சிம்மாதனத்தைக் கைப்பற்ற வேண்டுமென்ற நோக்கத்துடன் தன் தகப்பனாரை எதிர்த்து வந்தான். அப்பொழுது ஜனங்கள் அக்பருடைய சாமர்த்தியத்தையும், தைரியத்தையும், பயங்கரமான சைன்னிய வரிசையையும் கண்டு பிராந்தி அடைந்தார்கள். ஆனால், அவுரங்கஜீப் அக்பரைக் கபடவழியினால் துரத்திவிட்டு அக்கலவரத்தில் சம்மந்தப்பட்ட அனைவரையும் கடுமையாகத் தண்டித்துவிட்டார்.

அக்காலத்தில் ஜேபுன்னிஸா அடிக்கடி தன் தமையனான அக்பருடைய இருப்பிடத்திற்குச் சென்றுகொண்டிருந்ததால் அவுரங்கஜீப் அவளிடத்திலும் சந்தேகங் கொண்டு அவளுக்குக் கைசெலவுக் கெனக்கொடுத்து வந்த 4 லக்ஷ ரூபாயையும் நிறுத்திவிட்டார். அல்லாமலும் அவளுடைய சகல சாமான்களையும் ஜப்தி செய்ததுமன்றியும் அவளைக் கைது செய்து 'சாலிம்காட்' என்ற கோட்டையில் சிறையிலடைத்தார், சிறையிலிடப் பட்ட

போதிலும் ஜேபுன்னிஸா சற்றும் மனவருத்தமடையவில்லை.

சில தினங்கள் சென்ற பிறகு ஒரு நாள் அவ்ரங்கஜீப் தன் குமாரத்தியான ஜேபுன்னிஸாவைச் சந்தித்தபொழுது அவள் "நான் இப்பொழுது குற்றம் சாட்டப் பெற்று ஜெயிலில் அடைபட்டிருக்கிறேன். ஆனால் எதிரிகளில் கைதியாகப் பிடிபட்டு அவர்களுடைய பந்தோபஸ்தில் இருப்பதை விட என் பிதாவினுடைய காராக்கிருகத்தில் இருந்து வருவது எனக்கு மிகுந்த பெருமையைத் தருகின்றது" என்று தன் நிலைமையை விஸ்தரிக்கத் தொடங்கினாள்.

"உமக்கு விரோதமான கூட்டத்தார்களிடையே நான் சதியாலோசனை செய்து வந்ததாக விஷமத்தனமான பொய்த் தகவல்களை நீர் நம்பி சந்தேகித்து என்னை ஜெயிலில் அடைத்து விட்டீர்கள். கடவுள் சாக்ஷியாக நான் சொல்வதென்னவென்றால் அம்மாதிரியான துராகிருதமான விஷயமெதிலும் நான் சிறிதேனும் சம்பந்தப்படவில்லை. ஆனால் இந்தக் கலவரம் நடக்கப்போகுமென்ற சமாசாரத்தை முன்பே கேள்வியுற்று அதுமுதற்கொண்டு அக்பரிடம் அடிக்கடி சென்று இம்மாதிரியான செய்கைகள் செய்யக் கூடாதென்றும், மேலும் தன்னைப் பெற்ற தகப்பனாரை எதிர்த்துப் போர்புரிவது தர்ம விரோதமென்றும் இவைபோன்ற சிறந்த புத்திமதிகளையும் என்னால் கூடியமட்டும் சொல்லிக் கதறினேன். அனைத்தும் வியர்த்தமாயிற்று.

"அப்படியிருந்தும் பிதுர் துரோகியுடன் நான் சற்று சம்பந்தப்பட்டதின் பயனாகப்பலன் கிடைத்து விட்ட" தென்று தன் மனதில் பதிந்துள்ள நடந்த உண்மையான சமாசாரங்களைத் தன் பிதாவிடம் தெரிவித்தாள். இதைக்கேட்ட அவுரங்கஜீப் மிகுந்த துக்கப்பட்டுத் தான் ஆராய்ந்து அறியாமல் அருமையான புத்திரியை அநியாயமாகச் சிறைபிவிட்டதற்கு மிகவும் வருந்தினான்.

மேலும் அவுரங்கஜீப் அவளைச் சிறையினின்றும் விடுவித்து அவளுடைய சகல சொத்துக்களையும் திரும்பக்கொடுத்து, முன் அவளுக்குக் கைசெலவுக்கெனக் கொடுத்துவந்த தொகையைக் காட்டிலும் இரண்டு மடங்கு அதிகமான தொகையைக் கொடுத்து வந்தான். தான் அறியாமையினால் செய்த கொடுமைகளை நினைத்துத் துக்கித்தான்.

அப்பொழுது ஜேபுன்னிஸாவிற்கு வயது 44. இச்சம்பவத்திற்குப் பின் அவள் எவ்விதமான அரசாங்க விஷயத்திலும் தலையிட்டதாகத் தெரியவில்லை. பிறகு அவள் லாகூருக்குச் சென்று அங்குத் தங்கி அழியா அநேக பாடல்களைக் கவனஞ் செய்து புதிய புதியதான புத்தகங்களையும் வெளி யிட்டாள்.

அக்காலத்திய கலாசாலைகளில் மாணவர்கள் இவளுடைய புத்தகங்களை வாசிப்பதற்கு அனுமதி அளிக்கப்பட்டிருந்தது.

ஜேபுன்னிஸாவிற்கு "தகலூல்மகவி" என்று மற்றொரு பெயருண்டு. இக்கையெழுத்துடன் கூடிய "தீவான்" என்கிற ஒரு செய்யுள் புத்தகத்தைக் கவனம் செய்து இருக்கிறாள். பாரசீக பாஷையில் இதற்குச் சமானமான புத்தகம் கிடைப்பது அரிது. ஒவ்வொரு செய்யுளிலும் மிக அருமையான தத்துவங்களும் கல்வித் திறமையும் நிறைந்து இருக்கின்றன.

ஜேபுன்னிஸா தன் ஒவ்வொரு வேலைக்காரர்களிடமும் அன்பு வைத்திருந்தாள். ஒரு சமயம் சீனாதேசத்திலிருந்து கொண்டு வரப்பட்டதும் தன் பாட்டனாரால் கொடுக்கப்பட்டதுமான பெரிய நிலைக்கண்ணாடியை, ஒரு வேலைக்காரி கைதவறிக் கீழே போட்டு உடைத்துவிட்டாள். இவ்வாறு உடைத்துவிட்டுத் தன்னருகில் பயத்

தால் நடுங்கிக் கொண்டிருக்கும் தன் வேலைக்காரியை உடனே கோபித்துக் கொள்ளாமல் தன் இயற்கையான சாதுர்யத்துடனும் பொறுமையுடனும் அவளைநோக்கி "நீ அக்கண்ணாடி உடைந்துவிட்டதைக் குறித்துத் துக்கிக்க வேண்டாம். "खुशुद असबाव खुदविनोशिकस्त" தன் அழகைப் பார்த்து அகங்காரத்தை விருத்தி செய்து கொள்வதற்குச் சாதகமாய் இருக்கும் இக்கருவி யுடைந்ததைக் குறித்து நான் மிகவும் சந்தோஷப்படுகின்றேன். மேலும் அதனால் ஏற்படும் சில துர்க்குணங்களினின்றும் என்னைத் தப்புவித்ததற்கு நான் உனக்கு நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறேன்" என்று சொன்னாள். இவ்வாறான அர்த்த புஷ்டியுள்ள வார்த்தைகளைப் பெரும்பாலும் கவிஞர்கள் தான் எளிய நடையில் பிரயோஜனப் படுத்துவார்கள்.

அவள் தன்னுடைய 66 வது வயதில், அதாவது கி. பி. 1702-ல், இறந்தாள். அவளுடைய சமாதி டில்லியில் ஸப்ஜீமண்டிக்கு அருகாமையில் காபூலி தாவாஜாவின் மற்றொரு பார்சுவத்தில் இப்பொழுதும் காணப்படுகிறது.

அன்பர்களே! ஜேபுன்னிஸா ஸ்திரீ ரத்னமாயிருந்தும், மகம்மதிய வழக்கப்படி கோஷாவாகக் காலத்தைத் தள்ள வேண்டியிருந்தும், அவளுடைய சரித்திரமானது நம்மனைவர்க்குமோர் நல்ல பாடத்தைக் கற்பிக்கின்றது. கல்வி கற்கும் விஷயத்தில் அவள் பெரும்பாலும் தன் காலத்தைச்செலவிட்டுப்பெரியபண்டிதையானதும், அவள் அநேக கஷ்ட நஷ்டங்களுக்குட்பட்டபோதிலும் அவற்றை லக்ஷியம் செய்யாது தன்னுடைய திட தைரியத்தை விடாமலும், தனக்கொருவர் தீங்கிழைத்தாலும் அவற்றைச் சகித்துக்கொண்டு பதிலுக்குப் பதில் செய்யாது பொறுமையுடன் அக்கஷ்டங்களுக்குள்ளாகி, நல்ல வார்த்தை என்ற இணையற்ற ஆயுதத்தினால் களைந்து கஷ்டங்களினின்று தப்பித்துக் கொண்டும்; தன் இளம் வயதில் கலியாணம் செய்து கொள்வதில்லை என்ற சபதத்தைத் தன் கடைசிகாலம்வரை நிறைவேற்றியதினால் அவள் காரியத்தில் திட ஸங்கல்பமுடையவளென்று புலனாகிறது. மேலும், தனக்கொருவர் பரம சத்துருவாயிருந்தாலும் அவனிடம் சில நற்குணம் இருப்பதாய்த் தெரிந்தால் அவனிடம் மிகுந்த அன்புடையவளாய் இருப்பாள்.

எதிரியையும் தன் வழியில் திரும்புவதற்குள்ள சக்தி அவளிடம் அமைந்திருந்தது. அன்றியும் இவள் தன்னுடைய வாழ்வையும், நலத்தையும்,சுகத்தையும்,துக்கத்தையும் ஒரு பொருட்டாகக் கருதுவதில்லை. தனக்குக் கொடிய ஆபத்துகள் வந்தாலும் பிறர் க்ஷேமமாய் இருக்க வேண்டுமென்ற பெரும்நோக்கம் படைத்தவள். தவிர இவளுடைய சரித்திரத்தை அலசிப்பார்த்தால் தன்னலத்தியாக மூர்த்தியாய்க் காணப்படுகிறாள்.

நண்பர்களே! நம் தாய் நாடு மேன்மை அடைய வேண்டுமானால், நம்மைப்பிடித்த கஷ்டங்கள் தொலைய வேண்டுமானால், நம் தேசம் எப்பொழுதும் கீர்த்தியுடன் சிறந்து விளங்க வேண்டுமானால், சத்துருக்களும் நம்மைக் கண்டு நடுங்க வேண்டுமானால், ஜேபுன்னிஸா போன்ற வீரத்தாய்மார்கள் வேண்டுமென்பதை நாம் அனைவரும் ஞாபகத்தில் இருத்த வேண்டும்.

B. S. ஒட்டங்காட்கர், தர்க்கவாசஸ்பதி,
வித்யாபூஷண்.

# மானம்.

நீடாழிவுலகின்கண் அவதரித்த மாந்தர்களில் மானம் என்னும் சொல்லை அறியாதவர்கள் ஒருவருமில்லை. தோட்டி முதல் தொண்டமான்வரைக்கும் இந்த மானம் என்னும் சட்டத்திற்குக் கட்டுப்பட்டே நடக்கின்றனர். மனிதப்பிறப்பிற்குரிய குணங்களில் இதனைக் காப்பாற்றுதல் முதன்மையானது. மானம், வெட்கம் என்பது இரண்டும் ஒன்றே. மானம் என்பது ஒரு குணம். இந்தக்குணத்திலே பல தரும சங்கடங்கள் இருக்கின்றன. இதனை விட்டுவிடவுங்கூடாது, இருப்பதாகக் காட்டிக் கொள்ளவுங்கூடாது, இல்லை என்பதுங்கூடாது. மனிதர்களுக்கு வேண்டிய உயர்வான குணங்களிலே, பேசும் வாக்கியங்களிலே, செய்யுஞ் செய்கைகளிலே, நடக்கும் ஒழுக்கங்களிலே, இன்னும் பற்பல விஷயங்களிலேயும், ஏற்றத் தாழ்வு நடக்காமல் சாக்கிரதையாய்க் காக்கும் பொருட்டு இக்குணத்தைக் காவலாக வைக்கப் பட்டிருக்கிறது.

> " சீரினும் சீரல்ல செய்யாரே சீரொடு
> பேராண்மை வேண்டுபவர்."

புகழுடனே மானத்தை நிறுத்துதலை விரும்புபவர், புகழ் சம்பாதிக்குமிடத்தும் தம் குடிக்கு ஒவ்வாத இழி தொழிலைச் செய்யமாட்டார்.

மனித தேகத்திலே எந்தெந்த அவயவங்களை, மற்றும் எந்தெந்த விஷயங்களை இரகசியமாய்க் காப்பாற்றவேண்டுமோ அந்தந்த சம்பவங்களை மறைத்துக் கொண்டிருப்பதற்கு இது ஒரு ஆடையாக உதவுகின்றது. சட்டப்படி ஏற்பட்ட ஒழுக்க முறைகளிலே எவரும் தாழ்ந்து நிற்காமல் மேலோங்கிச் செல்வுதற்கு இது ஒரு கைகாட்டியாய் விளங்குகின்றது பற்றித்தான் ஆதிகாலந்தொட்டு அநுஷ்டானத்திற்கு வந்திருக்கிறது.

> " மயிர் நீப்பின் வாழாக் கவரிமான் அன்னார்
> உயிர் நீப்பர் மானம் படின்."

தன் மயிர்த் திரளில் ஒரு மயிர் நீங்கினும் உயிர் வாழாத கவரிமானை யொப்பவர் உயிர் நீங்குதற்கான மானம் பெருமளவு வரின் அவ்வுயிரை அந்தக்ஷணமே துறப்பர். முன்னொரு காலத்தில் உலகத்தை தன்குடைக் கீழ் ஆண்டு வந்த ராவணன் ஒரு மனிதனோடு சண்டைக்கு நிற்க முடியாமல் தன் முழு பலத்தையும் ஆயுதங்களையும் இழந்து 'ஐயோ! சீதை கை கொட்டிச் சிரிக்கலாயிற்றே, நான் பேசிய வீரமெல்லாம் நாசமாயிற்றே' என்று வெட்கப்பட்டுத்தலை குனிந்து வீட்டிற்கு ஓடினான் என்று ராமாயணத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகவே மனிதராய்ப் பிறந்த எல்லோரும் இதனை மதித்தே நடத்தல் வேண்டும். ஒருவனுடைய வாழ்வு நிச்சயமற்றது. அவன் செய்த செய்கையாகிய மானக் கேடானது நிலைபெற்று எக்காலத்தும் எல்லோராலும் இகழ்தற்குரியது. (உ-ம்.) திரௌபதியை மகுட மன்னர்களெல்லாம் நிறைந்த ராஜ சபையில் வைத்துத் துயிலுரிந்து மானங்கெடுக்க வெண்ணிய துரியோதனன் செயலானது இன்னும் பிரஸ்தாபிக்கப்படுகிறது. யாசகப் பிழைப்பு, யோக்கியதையற்றவாக எண்ணப்படுதல், அடிமைத்தனம், விரோதிகளிடத்தில் அடைக்கலம் புகல், முறைதவறிய மோகாவேசம் முதலிய அகௌரவமான செயல்களிலெல்லாம் இவ்வெட்கம் நிறைந்திருக்கின்றது.

வெட்கம், மானம் என்ற சட்டத்தைக் கடவுள் வைத்திராவிட்டால் ஆண், பெண் என்ற பாகுபாடு, பெரியோர், சிறியோர் என்ற பேச்சு முதலிய கௌரவச்செயல்கள் நடைபெறாமல் மிருகத்தன்மையின் இயற்கை குணங்கள் அமைந்து, உயர்வாகிய மனிதத்தன்மை மாறி நாயினும் கடையாய் நாசமுற நேரிடும். மானம் என்ற குணத்தினாலேயே உலகத்திலுள்ள ஆண் பெண்கள் ஆளப்படுகின்றனர் என்றால் இதற்குமேல் கூறுவது யாது ?

"இளிவரின் வாழாத மானமுடையார்
ஒளி தொழு தேத்து முலகு."

தமக்கு ஒரு அவமானம் வந்தவிடத்து அதைப் பொருமல் உயிர் வாழாத மானமுடையவரது புகழ்வடிவை, உலகத்தார் தொழுது துதியாநிற்பர். கௌரவமான மேற் பதவியைவிட்டு மதியீனத்தினுல் கீழ்ப்படியாகிய செயலுக்கு வருவது வெட்கமில்லே.

மனிதர்க்குரிய முக்கிய குணங்கள் பலவற்றிலும் ஆசையென்பது அதிகம். ஆசைப் படாத மனிதர் அகப்படுவது மிக அரிது. ஆசையென்பது ஒரு பிசாசு. அது பிடித்துக் கொண்டால் அதினின்றும் விடுபடுவது வெகு துர்லபம். மனிதன் வெட்கமறிவான். ஆசை வெட்கமறியாது. வெட்கக்கேடான காரியங்களின் மூலமாய்ப் பொருள் வருவாயை எண்ணினுலும், அந்த சந்தர்ப்பங்களில் அக்காரியம் செய்பவருக்கு அது காரணமாகத்தான் தோன்றும். ஆனுல் பிறருக்கு அது பிடிக்காது என்று அவனுக்குத் தோன்ருது; இப்படியே செய்து பழகினுல் முடிவில் அச்செய்கையானது இவனைத் தீயவழியில் கொண்டு வந்து விட்டுப் பலபேர் நகைக்கவும் இவன் மனிதத்தன்மையும் மாறிப்போய்விடும்படிக்கும்செய்துவிடக்கூடும்.

எவ்வளவு வரும்படி வருமானுலும் ஒழுக்கங்குன்றிய காரியங்களைச் செய்யாதிருப்பது மிக்க உயர்வான குணமாகும். முற்காலத்திய சில சரித்திரங்களில் ஆங்காங்கு சில சந்தர்ப்பங்களில் அக்காலத்திய பெரியோரும்கூட ஆசையென்ற வலைக்குள் அகப்பட்டு விரகதாபங்கொண்டு அருவருக்கத் தக்கதான தகாத பல செய்கைகளையும் செய்திருப்பதாயறிகிறேம். இவைகளுக்கு ஏதோ சில காரணங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. எது எம்மட்டில் உண்மையானுலும், நல்லோர் அருவருக்கத்தகுந்த பல விகாரச்செய்கைகள் அப்போது நடந்துள்ளனவென்பது மட்டில் உண்மைதான். சில காவியங்களிலுள்ள அலங்காரங்களில் பெண்களின் முக அமைப்பு, தேகலக்ஷணம் முதலியவைகள் பல பெரியோர்களால் வெளிப்படையாய்ச் சொல்லி வெட்கிப்போகும்படியாக வர்ணிக்கப்பட்டிருக்கின்றன. ஆண் பாலர் மட்டில் அவ்வலங்காரங்களைக் காணேம். எனவே இவ்வித ரகசியங்களால் வெட்கம் என்ற ஒரு கொள்கையானது சில காலங்களிலிருந்து கொஞ்சம் கொஞ்சமாய் முதிர்ந்து இப்போதிருக்கிற நிலைமைக்கு வந்திருக்கிறதென்று அறியலாகிறது.

நியாயம், நீதி, தருமம் நிறைந்த காலங்களில் வெட்கம் என்ற கொள்கை சிறு பான்மையாகக் கையாளப்பட்டதென்றும், இவை நீங்கியகாலத்தே நடக்கும் முதிர்ந்த செய்கைகளைத் தடுக்கும் வண்ணம் அதிக வெட்கம் இப்போது கையாளப்படுகிறதென்றும் சொல்லப்படலாம். எது எப்படியானுலும் மனிதப் பிறப்பிற்குரிய ஒழுக்கம், கௌரவம் குன்ருத செய்கைகளை விட்டுத் தீய காரியங்களில் பிரவேசிப்பது வெட்கமான காரியமென்றும், அது பாபமென்றும், தீயசெய்கைகளை அறவே விலக்கி மனிதர் நல்வழிப்பட வேண்டுமென்பது அவசியம். இதுபற்றியே நானும் இவ்விடத்தில் இதை எழுதத் துணிந்தேன். இதற்கு எல்லாம் வல்ல பரஞ்சோதி துணை நின்று காப்பாற்றுவாராக!

K. சாமிநாதன்.

---

## பெண்களும் நூல் நூற்கவேண்டும்.

நம் தாய் நாடாகிய பாரத நாடு இப்பொழுது வறுமை என்னும் பிணியாலும் அடிமை என்கிற பைசாசத்தாலும் மிகவும் வருந்துகின்றது. இவ்விரண்டையும் அழிக்க ஓர் வைத்தியர் தோன்றியுள்ளார். அவர் யாவர்? அவர்தான் உலகெளரம் போற்றும் புண்ணிய புருடராகிய மகாத்மா காந்தியடிகள். அவர் என்ன சொல்லுகின்றார்? "நான் ஹிம்சைப் போரினாலேயே (violence) இந்தியாவின் வறுமையையும் அடிமைத்தனத்தையும் வெல்லமுடியுமென்று நம்பவில்லை. அஹிம்சாப் போரினாலேதான் (non-violence) வெல்லமுடியும். அவ்வஹிம்சாப் போருக்குக் கருவி கைராட்டிணமே. ஆகையினால் இந்தியாவில் பிறந்த ஒவ்வொரு ஆடவனும் பெண்ணும் அஹிம்சாப் போருக்கு முன் வந்து கை ராட்டிணத்தை எடுங்கள்."

ஆகையினால் சகோதரிகளே! நீங்கள் ஒவ்வொருவரும் நூல் நூற்கவேண்டு மென்பதை யறியவில்லையா? பண்டைக்காலத்தில் நம் பாரத நாடாகிய புண்ணிய பூமியில் எத்துணை வீரத்தாய்மார்கள் போர்க் களத்திற்கே சென்று தேசத்திற்காக உயிர்விட்டிருக்கின்றனர். அப்பேர்க்கொத்த வீரத்தாய்மார்கள் நிறைந்த பாரத நாட்டிலே, அதுவும் தமிழ் நாட்டிலே, இப்போது நம் சகோதரிகள் அஹிம்சாப் போருக்கு முன் வாராமலிருப்பது ஏன்? வீட்டு வேலைகளுடன் ஒழிந்த வேளைகளில் தினம் ஒரு மணி நேரம் நூற்கவேண்டுமென்று தான் சொல்லுகின்றேன். ஆகையினால் தமிழ் நாட்டுச் சகோதரிகள் அனைவரும் இனியேனும் நூல் நூற்றற்றொழிலை ஆரம்பிப்பார்கள் என்று நம்புகிறேன். பாரத தேவியும் அவர்களுக்குத் துணைபுரிவாராக.

வந்தேமாதரம்.

கோவை சீனிவாசன்.

## லீலா.

பாகீரதி அம்மாள்.

" The treasures of the deep are not so precious as are the concealed comforts of a man locked up in woman's love."

பற்பல ஆபத்துக்களாற் சூழப்பட்டிருந்த போதும் ஸ்திரீகள் திடமனதுடன் தைரியமாயிருப்பதை நாம் பன்முறை பார்த்துப் பிரமித்திருக்கிறோம். எச்சங்கடம் புருஷர்களது உற்சாகத்தைப் பங்கப்படுத்தி அவர்களைத் தலை குனியச் செய்கின்றதோ, அச்சங்கட சமயத்தில் ஸ்திரீகளது சக்திகளெல்லாம் ஒருமித்து அதை நிவர்த்திக்கத் தயாராயிருக்கின்றன. அப்பொழுதே ஸ்திரீகளது உண்மையான மனம் நமக்கு நன்கு புலப்படுகின்றது.

ஐச்வரிய சுகத்தில் உழலுமோர் அபலையின் நாதனுக்கு அகஸ்மாத்தாய்ச் சில சங்கடங்கள் வந்து விடில், அவ்வேளை அவள் அநேக விதங்களால் அவனுக்கு மனோற்சாகத்தை யுண்டு பண்ணி, அடிக்கடி தைரியத்தைக் கொடுத்து, அவனது துக்கத்தை விலக்குகின்றனள். அப்படிப்பட்டவளது கஷ்டத்தையும் அவஸ்தையையும் பார்ப்பவரது மனங் கல்லாயினுங் கரையாதிருக்குமோ?

ஓர் கொடியானது ஒரு பெரிய விருக்ஷத்தைச் சுற்றிப் படர்ந்து, தன் இலைகளாலும் புஷ்பங்களாலும் அதற்கழகைத் தந்து, பெரும் புயல்காற்றால் ஆடியலையும்போது அதை விழவொட்டாமற் தடுப்பதுபோல், ஸ்திரீயானவள்

தன் கணவனிடம் அன்புடனிருந்து நல்ல ஸ்திதியிலிருக்கும் போழ்து அவனுக்கொரு அழகைக் கொடுப்பது மன்றி, திடீரெனச் சங்கடங்கள். அவனைச் சூழ்ந்த காலத்தும் தேறுதல் சொல்லி அவனுக்கோர் ஆதார ஸ்தம்பமாய் நிற்கின்றனள்.

அநேக வருஷங்களாய் என் சிநேகனாயிருந்த வசந்தனுக்குச் சற்குலத்திற் பிறந்தவளும், சௌந்தரியமும், நற்குணமுமுள்ள ஓர் பெண் பத்தினியாய் வாய்த்தாள். இவள் தந்தைக்கோ ஆஸ்தி கணக்கில்லாதிருந்தது. வசந்தனது ஆஸ்தி சொற்பமேயாயினும், அதிக செல்வாக்காயிருந்த தன் பிரிய பத்தினிக்குக் கஷ்டமென்பது எவ்விதத்துந் தெரியாமல் அவனிருந்து வந்தான்.

ஆனால் நம் வசந்தனது வைபவம் அநேக நாட்கள் தங்கவில்லை. தன்னிடமிருந்த திரவிய மெல்லாவற்றையும் வைத்திருந்த பேங்க் (Bank) தவறி விட்டது. அச்சமயம் அவனுக்கு விவாகமாய் இரண்டு வருஷங்கள் கூடக் கழிந்திரா. பேங்க் திடீரெனத் திவாலானதால் வசந்தனது ஆஸ்தியெல்லாம் போய் விடத் துக்கசாகரத்தி லாழ்ந்தனன். தன் மனைவி சுகமடைய வேண்டுமென இவனுக்கிருந்த இச்சை யெல்லாம் இவனிருந்த விடத்திலேயே தங்கிவிட்டது. நிராசை இவன் மனதிற் குடிகொண்டது. இக்கதிக்கு வந்த போதும் தன் ஸ்திதியை வேறெவருக்கும் வாய்விட்டுச் சொல்லாது, மிக்க துக்க சாகரத்தி லாழ்ந்திருந்தனன்.

மனதைப் பிளக்கும் இத்துக்க சமாசாரம், தன் பிரிய பத்தினியின் செவிகளுக் கெட்டும் பக்ஷத்தில், அவள் தேகத்திற்கு ஹானி யுண்டாகுமென்ற அச்சத்தால், வசந்தன் தன் துக்கக் குறிகளை மறைத்து அவளைச் சந்தோஷிப்பிக்கவே முயற்சி செய்வான். ஆனால், புத்திக் கூர்மையுள்ள அப்பெண்ணோ தன் பிராணநாதன் ஏதோ கஷ்டத்திற்குள்ளாயிருப்பதாக உடனே அறிந்துகொண்டனள். அவனை தன் இனிய மொழிகளாலும், நற்சுபாவத்தாலும் உல்லாசப்படுத்திக்கொண்டேயிருக்கப் பிரயத்தனப்படுவாள். வசந்தனும் அவளது மெல்லிய இனிய குரலால் தன் துக்கத்தைக் கொஞ்ச நேரம் மறந்திருப்பான். இதுவரைக்கும் சுகத்தையே அனுபவித்து வந்த தனது பத்தினிக்கு இப்பொழுது கஷ்டம் வந்து விட்டதேயென்ற விசாரத்தால் துக்கிப்பான். இதுவரை சந்தோஷத்தால் மலர்ந்திருந்த அவளது முக கமலமானது, இனி விசனத்தால் வாடிவிடுமோ வென விசனப்படுவான். பிரகாசித்துக் கொண்டிருக்கும் அவளது விசால நேத்திரங்கள் துக்கத்தால் மங்கலடையுமோ வென மலைப்பான். கவலையின்றிச் சந்தோஷத்தாற்றதும்பியிருக்கும் அவளது மனம் தன் மனம்போற் கஷ்டப்படுமேயெனத் தவிப்பான். இவ்வண்ணமே அநேக எண்ணங்கள் அவனைப் புண்படுத்தின.

ஒருநாள் வசந்தன் எனதில்லம் வந்து தன்னை வருத்தி வந்த துக்க சமாசாரங்களெல்லாவற்றையும் என்னிடஞ் சொல்லலுற்றான். முகத்திற் தோன்றிய குறிகளால் அவன் மிக்க நிராசையுடனிருப்பதாக நன்கு விளங்கிற்று. சங்கதிகள் யாவற்றையும் விசாரித்த பின், நானவனை நோக்கி, "வசந்தா! இவை யாவற்றையும் உன் பத்தினி அறிவாளோ?" எனக் கேட்டேன்.

இதைக் கேட்டவுடன் அவனது கண்களினின்றும் நீர் தாரை தாரையாய்ப் பெருகிற்று. உடனே என்னை நோக்கி, "எனது ஸ்திதியைப் பார்த்து ஏதாயினும் இரக்கங் கொள்ளுவாயாகில், என் பத்தினிக்கு இதைப்பற்றி ஒரு வார்த்தை கூடத் தெரிவிக்காதே. ஏனெனில், அவளது சுபாவத்தை நினைக்கும் பொழுது என மனம் படுங் கஷ்டத்திற்குக் கரையில்லை" என்றான்.

நானுடனே, "அவளுக்குத் தெரிவித்தே ஆகவேண்டும். இதை அதிக நாட்கள் மறை

த்து வைக்க இயலுமா? இத்துக்க சமாசாரத்தைப் பிறரால் அவளறிவாளாகில், மிக்க கஷ்டத்திற்குள்ளாவாள். நீயாகவே இதை அவளிடம் சொல்லும் பக்ஷத்தில் அதிக துக்கமடையாள். இச்சமாசாரத்தை அன்புக்குக் காரணமாயிருக்கும் உன்னாலறியும் பக்ஷத்தில் அவளது துக்கம் அநேகமாய்க் குறைந்துவிடும். இதுவுமன்றி, அவளது இனிய மொழிகளால் உனக்கு சமாதானமு முண்டாகும். இது மாத்திர மல்ல. நீயேதோ விசாரப்பட்டு வருந்தி வருகிறாயென அவள் வெகு சீக்கிரமறிந்து கொள்ளுவாள். புருஷன் தன் துக்கத்தைத் தன் மனைவியிடமிருந்து மறைத்து வைக்குங்கால், அவனது காரியம் அவளுக்கு அவமானத்தையே உண்டு பண்ணுமென்பதிற் சந்தேகமில்லை" என்றேன்.

வசந்தன் மிக்கத் தாழ்ந்த குரலுடன், "மித்ரா! 'உன் கணவன் பிச்சைக்காரனானான்' என்று சொல்லி எப்படி அவளாசையைப் பங்கப்படுத்துவேன்? அவள் தன் சுகங்களையெல்லாம் இப்பொழுது விலக்கவேண்டி வருமே! அங்கிங்கு வேடிக்கையாய்ப் போய் வருவதை இனி நிறுத்திவிட வேண்டும். என்னுடன் தரித்திரத்தின் மத்தியில் நின்று நாட்களைக் கழிக்கவேண்டும். இச்சங்கதியை அவளுக்குச் சொல்லுவதெப்படி யெனில், சௌக்கியம் எனப்படும் பர்வதத்தின் சிகரத்திலிருந்து, கீழே அவஸ்தை யெனுங் கடலிற் தள்ளுவது போலாமே! அதையவள் எவ்விதம் சகிப்பாள்? வேண்டாம். அதை நினைக்கவும் வேண்டாம்" என்றனன்.

இவ்விதம் வசந்தன் தன் துக்கத்தை வெளியிட்டுப் புலம்ப, நானவனைச் சாந்தப்படுத்தி, "என்னவானாலுஞ் சரி, இச்சங்கதியை உன் மனைவிக்குத் தெரிவிப்பதே நலம். நீயோ இனி உன் வரவுக்குத் தகுந்தவாறு இருக்கவேண்டும். முதலில் நீ வசித்து வரும் வீட்டை விடுத்துச் செல்லவேண்டும். நடந்த சங்கதியைக் குறித்துத் துக்கப்படுவதிற் பலன் யாது? அவளுடன் நீ சுகமாய் வசிக்க இவ்வளவு பெரிய வீடு உனக்கு வேண்டுவதில்லை" என்றேன்.

வசந்தன் மௌனமாயிருக்கவே, நானவனை நோக்கி, "வசந்தா! உனது கஷ்டத்தைத் தானுமனுபவிக்க உனது பத்தினி தற்சமயம் தயாரா யிருக்கிறாளென்று எனக்குப் பூர்ண நம்பிக்கையுண்டு. இது மாத்திரமல்ல, அவளது நற் சுபாவத்தால் பற்பல அதிசய சக்திகளும், நிகரில்லா மன தைரியமும் இக்கஷ்ட காலத்திலேயே உண்டாகுமென்பதிற் சந்தேகமில்லை. உனது சுகத்தைக் கருதியே கேவலம் தன்னுயிரிருக்கிறதெனத் தைரியமாகச் சொல்லுவாள். வசந்தா! சங்கட சமயங்களில் தன் பதிக்குச் சகாயஞ் செய்த பின்னரே ஒவ்வொரு புருஷனுக்கும் தன் பத்தினியின் வாஸ்தவமான யோக்கியதை புலப்படுகிறது. அச்சமயமே பத்தினியானவள் எல்லாச் சுகத்தையுங் கொடுக்கும் ஓர் தேவதையென விளங்குகின்றாள்" என்றேன்.

நான் சொல்லுவது சரியென வசந்தனுக்குத் தோன்றவே, என்னிஷ்டப் பிரகாரஞ் செய்ய ஒத்துக்கொண்டு அவன் தன் வீடு நோக்கிச் சென்றனன்.

இவ்வளவு செய்தும் நான் நினைத்தபடி முடியுமோ முடியாதோவெனக் கவலை கொண்டேன் என்பது வாஸ்தவமே. சௌக்கியத்திற்குக் காரணமாகிய ஸ்திரீ சங்கடப்படும் காலத்தில், அவள் மனதைப் பரீக்ஷிப்பது மிக்கக் கடினமே. இதுவரை அனுபவித்து வந்த சுகங்களை ஒவ்வொன்றாய் நிறுத்தவேண்டுமென்பதை யறிந்த அவளது மனம் அதிகக் கஷ்டத்திற்குள்ளாகு மென்றெண்ணினேன். இதுவுமன்றி, நல்ல குடும்பத்திலுள்ள மனிதர்களுக்குக் கஷ்டங்கள் நேரிடுமாயின், அவை அவர்கள் மனதைப் பிளந்து மிக்க ஹானியை விளைவிக்கின்றன. சுருக்கிச் சொல்லுங்கால், மறுநாட் காலை வசந்தன் திரும்பி வந்து யாவற்றையும் என்னிடம் சொல்லும்வரை, என்னுடம்பில் உயிரே யில்லாமலிருந்தது.

வசந்தன் மறுநாள் என்னைப் பார்த்த பொழுது, "மித்ரா! என்ன சொல்லுவேன்! நான் சொல்லிவந்த சங்கதிகளெல்லாவற்றையும் என் மனைவி ஒரு தேவதையைப்போல் சாந்தமாய்க்கேட்டு வந்தனள். அவளுக்கு ஓர் விதமான சமாதானமுண்டானதாக அவள் முகத்திலிருந்து தோன்றிற்று. தன்னழகிய கரத்தை என் கழுத்தின் மேலிட்டு, 'சமீபமாகத் தங்களை வருத்தி வந்த துக்க மிதுதானே?' என்றனள்" என்றனன்.

பிறகு நான், "வசந்தா; நீ இப்பொழுது செய்த காரியம் உனது நன்மைக்கே! அன்பிற்குரிய மனையாளிடம் உனது துக்கத்தைச் சரியான சமயத்திற் சொல்லிவிடுங்கால், உனக் கிப்படிப்பட்ட சுகமே யுண்டாகும். நம் பத்தினிகளிடம் நமக்குண்டான கஷ்டத்தைச் சொல்லும்பொழுது, மனதைப் பிளக்கும்படியாயிருந்தபோதிலும் அவர்களது இனிய குரலால் எறக்குறைய நமது துக்கம் சாந்தமடையுமென்பதிற் சந்தேகமில்லை. ஆகையால், இன்று முதல் உன் அவமானத்தை விடுத்து ஏழைகளைப்போல் வசிக்க முயற்சி செய்வாயாகில், தரித்திரத்தா லுண்டாகுந் துக்கமெல்லாம் உன்னை விட்டு விலகும்" என்றேன்.

சில தினங்களுக்குப் பிறகு வசந்தன் தன் பெரிய வீட்டை விற்று, ஊரினின்றும் இரண்டு மைல்களுக்கப்பாலிருந்த ஓர் சிறிய குடிசையை விலைக்குப் பேசி முடித்தான். தனக்கவசியமாய் வேண்டிய வஸ்துக்களையும், தன் மனைவி அன்புடன் வைத்திருந்த வீணையையுந் தவிர மற்றெல்லாச் சாமான்களையும் விற்றனன். பிறகு ஒரு நல்ல தினத்தில் தன் புதிய வீட்டிற்குச்-குடிசைக்கு-சென்றனன். தானாகவே கஷ்டப்பட்டுச் சாமான்களை அக்குடிசைக்குத் தூக்கிச்சென்று, அவை யாவற்றையும் வைக்க வேண்டிய இடங்களில் அழகாய் வைத்துவிட்டு, அன்று மாலை என்னையுந் தன் புதிய வீட்டிற்கு அழைத்துச் சென்றனன்.

முக்கிய ரஸ்தாவை விடுத்து ஓர் சோலைக்குட் புகுந்தோம். கொஞ்சதூரஞ் சென்ற பிறகு எங்களுக்கு ஓர் குடிசை தென்பட்டது. வைசாக மாதமாயிருந்ததால், வசந்த ருதுவின் ஐச்வரியம் நிறைந்து, எங்கும் பசுமையாயிருந்தது. பெரும் பெரும் விருக்ஷங்கள் தங்கள் பலன்களின் பாரத்தைத் தாங்கச் சக்தியின்றி வளைந்து நின்றன. சண்பகம், மல்லிகை முதலிய புஷ்பச் செடிகளிலும், அவைகளைச் சுற்றிப் படர்ந்திருந்த கொடிகளிலும் மலர்ந்திருந்த அழகிய புஷ்பங்களினது மதுர வாசனையானது தென்றல்காற்று மெல்லன வீசுவதால், எங்கும் பரவி மனதிற்குல்லாசத்தைக் கொடுத்தது. கோகிலங்கள் செவிகளுக்கின்பத்தை யூட்டும் ஸ்வரத்தால், தங்கள் பிராணபதிகளின் மனதை ரமிக்கச் செய்து கொண்டிருந்தன. குடிசையி னருகிலிருந்த ஓர் சிறிய தடாகம் அழகிய தாமரைப் புஷ்பங்களால் நிரம்பியிருந்தது. குடிசைக்கெதிரில் தெளிவானநீருடன் ஓர் சிறிய ஓடையுமிருந்தது. சம்சார சாகரத்தில் விழுந்து புரண்டு கரை தெரியாமற் தவிக்கும் ஒருவன், இப்படிப்பட்ட ரமணியமான இடத்தைக் காணும் பொழுது, ஈச்வரனே தன் லீலைகளுக்குத் தகுந்த விடம் இதுவென நினைத்து, நிர்மாணித்திருப்பதாக வெண்ணி, அவரது சிருஷ்டியின் அழகைக் கண்ணுற்றுக் கொஞ்ச நேரமாயினும் தன் துக்கத்தை மறக்காதிருக்க முடியாதென்பதிற் சந்தேகமில்லை.

அம்மாதிரியாகவே நாங்களும் ஈச்வரனது சிருஷ்டி சௌந்தரியத்தைக் கண்டு மகிழ்ந்து குடிசையின்சமீபம் வந்து சேர்ந்தோம். உடனே குயிலையொத்த ஓர் இனிய குரல் எங்கள் காதில் விழ, வசந்தன் என் கையைப் பிடித்து என்னைத் தடுத்தான். நாங்களிருவரும் அக்குரலைக் கேட்க அங்கேயே நின்றோம். லீலாவே பாடிக்கொண்டிருந்தாளெனச் சொல்லவும் வேண்டுமோ! வசந்தனுக்கு இஷ்டமானதும், மனதிற்கு உற்சாகத்தைக் கொடுக்கும்படி

யுமானதுமான பின்வரும் ச்லோகத்தை வீணை யிய மீட்டிப் பாடிக்கொண்டிருந்தனள்:—

"சரிகமபதநிஸ தாம் தாம்
வீணு சங்கிராந்த காந்த ஹஸ்தாம் தாம்
சாந்தாம் மிருதுல ஸ்வாந்தாம்
குசபராந் தாம் நமாமி சிவகாந்தாம்."

பாட்டை நன்ருகக் கேட்க வசந்தன் கொஞ்சம் முன்னுற் சென்ருன். ஆனுல் காலடி சத்தத்தைக் கேட்ட அப்பெண்மணி உடனே தன் பாட்டை நிறுத்திச் சாளரத்தின் வழியாக எங்களை நோக்கினுள். கமலத்தைப் பழிக்கும் அவளது சௌந்தரிய முகத்தைப் பார்த்து நான் அகமகிழ்ந்தேன். அன்று லீலா சாதாரண வஸ்திரத்தையே உடுத்தி யிருந்தனள். காட்டுப் புஷ்பங்களாற் தன் அளகபாரத்தைத் தானுகவே அழகுபடுத்தி யிருந்தனள். அவளது முகத்திற் புன்னகையே தென்பட்டது.

நாங்கள் குடிசைக்குட் செல்லாமல், வனத்தினழகைப் பார்த்துக் கொண்டே, லீலாவினுல் கொண்டுவந்து போடப்பட்ட ஆசனத்திலுட் கார்ந்தோம். கொஞ்ச நாழிகைக்குள் பழங்கள் நிறைந்த ஓர் தட்டை எங்களுக்கு முன் அன்புடன் அவள் வைத்தனள். இவ்வளவு கஷ்டத்திலும் தன் பத்தினி உல்லாசமாயும், ஆனந்தமாயு மிருப்பதைப் பார்த்த வசந்தன் ஆனந்தக் கண்ணீர் பெருக்கினுன். பிறகு பற்பல சங்கதிகளைப் பற்றிப் பேசியிருந்தபின் நான் அவர்களிடம் விடை பெற்று என் வீடு நோக்கிச் சென்றேன். அப்பொழுது,

"மனைத்தக்க மாண்புடையளாகித் தற்கொண்டான்
வனத்தக்காள் வாழ்க்கைத் துணை"

என்னும் தெய்வப் புலமைத் திருவள்ளுவரது திருக்குறள் என் ஞாபகத்திற்கு வந்தது.

# உணவும் உடையும்.

பி. ஆர். சின்னகிருஷ்ணசாமி.

எனதன்பார்ந்த சகோதர சகோதரிகளே, தேவரும் மூவரும் முனிகளும் வாழ்ந்த புண்ணிய நாடாகிய நமது பாரத நாட்டினிடையே பண்டைக் காலத்தில் (அதாவது 200 வருஷங்களுக்கு முன்னுல்) மனித வாழ்வுக் கவசியமான பொருள்கள் யாவையும் உற்பத்தி செய்து வந்தார்கள். நம் நாட்டிலிருந்து அயல் நாடுகளுக்கும் ஏராளமாகச் சப்ளை செய்து வந்தார்கள் என்பதை நமது தேச சரிதத்தின் வாயிலாகக் காண்கின்ருேம்.

மனிதனுக்கு அத்யாவசியமாய் வேண்டியது உணவும் உடையுமே. இவ்விஷயங்களில் நம் முன்னேர்க்கும் நமக்கும் உண்டாயிருக்கும் சிற் சில வித்தியாசங்களைப் பற்றியே ஈண்டு வரைவோம்.

முற்காலத்தில் விவசாயிகள் தங்கள் பூமியில் என்ன தானியங்கள் விளையுமோ அவைகளைத் தங்களுக்கு உணவாக உட்கொண்டு வந்தார்கள். தவிர தொழிலாளர் (பண்ணையாள்)களுக்கும் தங்கள் உணவுக்காக உபயோகிக்கும் தானியங்களையே அவர்கள் குடும்பங்களுக்குப் போதுமான அளவு கொடுத்து வந்தார்கள். தங்கள் குழந்தைகளுக்குக் கல்வி கற்பிக்கும் உபாத்தியாயர்களுக்கும் மாதம் ஒன்றுக்கு 16 வள்ளம் முதற்கொண்டு 24 வள்ளம் வரைக்கும் கொடுத்து வந்ததாகத் தெரிகிறது. குடும்பம் நடத்தும் பொருட்டு ஏதாவது சில்லரைச் சாமான்கள் வேண்டியிருந்தாலும் தானியங்களைக் கொண்டே மாற்றிக் கொள்வார்கள்.

நமது முன்னேர்கள் ஏராளமாகத் தானியங்களை உற்பத்தி செய்து வந்தார்கள் என்பதை அறிவதற்குக் கிராமங்களிலுள்ள வீடுக

ளின் முன் வாசல்களிலிருக்கும் தானியங்கள் கொட்டும் குழிகளே அத்தாட்சியாகும்.

நான் கிராமங்களின் அநுபவத்தைக் கொண்டே இவ்வியாசம் எழுதவேண்டி யிருப்பதால் அதற்கு உதாரணமாக நான் வாசம் செய்யும் கிராமத்தையே எடுத்துக் கொள்கிறேன். நான் குடியிருக்கும் கிராமத்தில் சுமார் 500 வீடுகள் வரை இருக்கின்றன. இவ்வூரிலிருக்கும் தானியம் கொட்டும் குழிகளோ சுமார் 600 வரைக்கும் இருக்கின்றன. தற்காலம் பெய்த பெருமழையின் காரணமாக 400 குழிகள் வரைக்கும் புதிதாய் இக்கிராமவாசிகள் கண்டு பிடித்திருக்கிறார்கள். இன்னும் எத்தனை குழிகள் பூமியில் மறைந்திருக்கின்றனவோ தெரியவில்லை. முற்காலத்திலோ சோளம், கம்பு, தினை, அவரை, துவரை முதற்கொண்டு எல்லாத் தானியங்களையும் குழிகளில்தான் கொட்டுவார்கள்.

தவிர அக்காலத்தில் குறைந்த பக்ஷம் 4, 5 வருஷங்களுக்குத் தங்கள் குடும்பச் செலவிற்குப்போதுமான தானியங்களை இருப்பாகவைத்திருப்பார்கள் அப்படி வைத்திருப்பதனால் ஏதாவதொரு சமயத்தில் மழை யில்லாமல் போய்விட்டாலும், பஞ்சம் என்னும் கொடிய நோய் அவர்களைத் தொடருவதற்கில்லாமலிருந்தது. ஏழை மக்களிடம் பஞ்சம் ஏதாவது அணுகினாலும் செல்வவர்தர்களாயிருப்பவர்கள் அவ்வேழை மக்களைக் காப்பாற்றும் சக்தியும் தர்ம புத்தியும் அவர்களிடமிருந்து வந்தன. நமது முன்னோர்கள் தங்கள் தேகத்திற்கு ஒவ்வாததும், சீதோஷ்ண ஸ்திதிக்குத் தகுதியில்லாததுமான உணவுகளை உட்கொள்ளாததினால் யாதொரு நோத்து வியாதியும் அவர்களை யணுகாமல் திடகாத்திரராயும் பூரண ஆயுளையுடையவராயும் வாழ்ந்து வந்தார்கள்.

தற்காலத்தில் ஒரு சாதாரணக் குடும்பத்திற்கு 5 பொதி தானியம் உணவுக்காக வேண்டி யிருந்தாலும் 2 பொதி தானியம் விளையும்படி தன் பூமியில் வேளாண்மை செய்வது சந்தேகந்தான். அவ்விதம் விளைந்து விட்டாலோ பள்ளன் வீட்டுக்கு செல்லு வந்த சங்கதியாய் தப்பாகும்மா செய்து 2,3 மாதத்திற்குள் தீர்த்து விடுவார்கள். தவிர தம் பாக்கி பூமியில் தம் உணவுக்குப் பிரயோஜனமாகாததும் இதர விடங்களுக்கு அனுப்பக் கூடியதுமான மகசூலை (பருத்தி, பூண்டு, புகையிலை) தானியத்தை விடக் கொஞ்சம் ஜாஸ்தியாக வேளாண்மை செய்வார்கள். இம்மகசூல் அறுவடையாவதற்கு முந்தியே உணவுப் பொருள்கள் தீர்ந்துபோய் விட்டபடியால் வியாபாரிகளிடமோ அல்லது பணக்காரர்களிடமோ சென்று, இந்த வருஷம் எனக்குப் பருத்தி கொஞ்சம் கூடியேயாகும். அப்பருத்தியை நீங்களே எடுத்துக் கொள்ளுங்கள். விலையையும் கொஞ்சம் (60 ரூபாய்க்கு விற்கும் பக்ஷத்தில் 50 ரூபாய்க்கு) சாசமாய்ப் போட்டுக் கொள்ளுங்கள். எப்படியாவது இச்சமயம் குடும்ப செலவிற்கு ரூபாய் (100) வேண்டியிருப்பதால் தயவு செய்ய வேண்டும். வட்டியும் உங்களிஷ்டம்போல் போட்டுக் கொள்ளுங்கள் என்று வங்காளம் பாடுவான். நமது முன்னோர்களைப் போல ஏழைகளைக் காப்பாற்றும் கெட்டகுணம் தற்காலச் செல்வர்களிடத்து இல்லையாதலால் சற்றேனும் மனமிரங்காமல் இதுதான் நல்லசமயமென்று வியாபாரிகள்நினைத்தவராய்,இச்சமயம் பணம் கிடைப்பது அரிதுதான். ஆனாலும் உனது பருத்தியை ஜாஸ்தி எடையுள்ள (27-28) ராத்தல் குண்டில் நிறுத்துக் கொடுக்கும் பக்ஷத்தில் ரூபாய் கொடுக்கிறோம், இல்லாவிடில் எங்களிடம் கிடையாது என்பார்கள். பணக்காரர்களோ 100-க்கு மாதம் ஒன்றுக்கு 3 ரூபாய் வட்டிதான்; இஷ்

ட்மா என்று அநேக தந்திரமாய்ச் சொல்வார்கள். (இவின் பாபம்! என்ன செய்வான்? வீட்டில் சாப்பாட்டுக்கு இல்லே, சில்லரைக் கடன்காரர்களோ கண்ட பக்கமெல்லாம் கேட்கிறார்கள்) சரி எப்படியாவது ஆகட்டும் என்று வியாபாரிகளிடம் ரூபாய் வாங்கிக் கொண்டு வீடு நோக்கிவருவான். இவன் ரூபாய்க்காகப் போயிருக்கிறானென்று சங்கதிதெரிந்தவுடன் 4, 5 பேர்வழிகள் இவன் வீட்டிலிருப்பார்கள். இவன் வீட்டிற்குள் நுழைந்தானோ இல்லையோ சில்லரைக் கடன்காரன் இவன் முன்னால் ஆஜராகி ஐயா இதோ தாங்கள்வாங்கியிருக்கும் சாமான்களின் லிஸ்ட்; காப்பிக் கொட்டை வீசை 2, அஷ்டகிராம் சர்க்கரை வீசை 3, ரவை படி 6, கிஸர் பாக் 8, இதற்கு ரூபாய் மொத்தம் 10, முன் பாக்கி ரூபாய் 5 ஆகப் பதினைந்தும் கொடுங்கள். 4, 5 மாதமாகியும் ஏதோ மரியாதைக்காகச் சும்மாவிட்டுவிட்டேன். தயவு செய்து கொடுங்கள். கடைக்குச் செல்ல வேண்டுமென்பான். அதன் பின்னால் தையற் கடைக்காரன் வருவான். அவன் லிஸ்ட் எடுத்ததும் இங்கிலீஷ் டுயில் ஷர்ட் 2, கிலாஸ்கோ மல்லில் பைரஸ் 3, சம்சாரத்திற்கு ஜாக்கெட் 2, இதற்கு மொத்தம் ரூபாய் 25 ஆகிறது. ரூபாய் கொடுத்துவிட்டு வேறே ஜோலி பாரும் என்பான். இப்படியே அரிசி கொடுத்தவர்களும் கைக்கடனாகக் கொடுத்தவர்களும் எல்லோரும் ஏககாலத்தில் கூச்சல் போடுவார்கள். இவர்களுக்கெல்லாம் கணக்குத் தீர்த்ததுபோக பாக்கி 10-20 ரூபாய் மீதியாகும். இதென்ன! ஒரு வாரத்திற்குள் குளோஸ் ஆய்விடும். மறுபடியும் இவ்விதமே கடன்வாங்கியாவது டீக்கச்சேரி, தென்னமரத்துக் கச்சேரி முதலியவற்றை ஒழுங்காக நடத்துவான். பருத்தி மகசூல் வந்தவுடன் பருத்திக்காகக் கடன் கொடுத்தவர்களெல்லோரும் வந்து பருத்தி எனக்கு உனக்கு என்று ஆரவாரம் செய்வார்கள். பருத்தியோ (காலாவதியில் மழை பெய்யாததால்) ஒருவனுடைய கடனுக்கே சரியாய்ப்போகும். மற்றக் கடன்காரர்களோ தான் எழுதிக்கொடுத்த புரோநோட்டைக் கோர்ட்டில் தாவாசெய்து பூமிகளை ஜப்திசெய்யவோ அல்லது அவனை வாரண்டில் பிடிக்கவோ ஏற்பாடு செய்கிறார்கள். இவனும் இதற்குள்ளாகத் தனது பூமிகளை அடமானம் வைத்தாவது கடன்வாங்கிச் செலவுதொகையுடன் கோர்ட்டில் கொண்டுபோய்க் கட்டிவிடுகிறான். கடன் இல்லாதபோதே தனக்கு வரும் வரும்படியைக்கொண்டு இல்லறம் நடத்தாமல் கடன் வாங்கின ஆசாமி அதே வரும்படியைக்கொண்டு கடன்காரனுக்கு வட்டியும் கொடுத்துத் தானும்எத்தனைநாளுக்குச் செலவு செய்வான். வளர்பிறைச் சந்திரனைப்போல நாளுக்குநாள் கடனையும் வளர்த்துக்கொண்டே வருவான். 2, 3 வருஷங்கள் ஆகவே பிதுரார்ஜித சொத்துக்குக் கடன் ஏகதேசம் ஆய்விடும். கடன் ஜாஸ்தியாக ஆகத் தானிய வேளாண்மைகள் செய்வதை அடியோடு நிறுத்தி விடுவான். பூராபூமியிலும் பருத்திபோட்டுத் தனது கடனைத் தீர்த்து விடலாமென்ற எண்ணத்துடனிருப்பான். ஆனால் நவீன நாகரிகத்தில் மூழ்கிக் கிடக்கும் ஆசாமியானதால் (டாம்பீகமாய் இருக்க நினைத்து வரவுக்கு மேல் செலவு செய்வதால்) அவனது எண்ணங்கள் பகற்கனவாய் விடுகின்றன. கடன்காரர்கள் இம்சை ஜாஸ்தியாய்விடவே இவனுக்கு ஒருவிதமான யுக்தி உதிக்கிறது. இக்காலத்தில் காலாவதியில் மழையில்லாமல் போகிறபடியால் பூமியில் வரும்படி அதிகம் கிடைக்கிறதில்லே; ஆகையால் பூமியை விற்பனை செய்து கடனையும் கட்டிவிட்டுப் பாக்கித் தொகையைக் கொண்டு வட்டி வரவு செலவு செய்யலாம்; கஷ்டமில்லாமல் காசும் சம்பாதித்து விடலாம்; இதுதான் நல்ல யோசனை யென்று

தனது பூமிகளை விற்பனை செய்து கடன்காரருக்குக் கொடுத்தது போக பாக்கி ஏதாவது இருந்தால் உப்புமா காப்பியோடு ஒரு வருஷத்திலோ அல்லது அடுத்த வருஷத்திற்குள்ளோ ஒழுங்கு செய்து விடுவான். ஆசாமிக்குக் கொண்டாட்டம் போய் கூழுக்குத் திண்டாட்டமாய்விட்டது. இனிக் கூலி வேலை செய்தாவது ஜீவிப்பானென்றால் சொத்தைத் தொலைத்தவன் தன் தேகத்தையாவது தொலைக்காமலிருந்தானா. அப்படியும் இல்லை. இவன் தேகத்திற்குச் சற்றேனும் ஒவ்வாத உணவுகளையும் குடிவகைகளையும் உட்கொண்டு வந்ததினால் இவனுடைய தேகமும் தீரா வியாதிக்குள்ளாய்விட்டது. இவனுடைய செல்வமானது இவனைவிட்டு நீங்க நீங்க இவன் சுற்றத்தார்களும் உண்டாடல் களியாடல் முதலியன நடத்திய சிநேகிதர்களும் இவனை விட்டு நீங்கி விட்டார்கள். இவனுடைய அட்டகாசங்களையும் அநாகரிகங்களையும் கண்டு சகிக்க மாட்டாதவனாய் எமனும் 40 வருஷங்களுக்குமேல் இவனை இங்கு விட்டிருக்கக் கூடாதென்று பிடிவாரண்டு அனுப்பி விடுகிறான் போலும்! இனி இவனது குடும்ப நிலைமையைக் கடவுளே கவனிக்கத்தக்கது!

இனி மிராசுதார்களையும் ஆதிதிராவிடர்களையும் பற்றிச் சிறிது கவனிப்போம். தற்காலத்தில் பணக்காரர்கள் ராஜ்யத்தில் பஞ்சமர்கள் பரம்பரை அடிமைகள்தான். மிராசுதார்கள் இக்காலத்தில் வேளாண்மை செய்வது மிகவும் அரிது. தங்கள் கால்நடைகளின் தீனிக்காகவும் தங்கள் பண்ணையாட்களுக்காகவுமே சுலபமாய்த் தானிய வேளாண்மை செய்வார்கள். ஒவ்வொரு ஆதிதிராவிடனும் ஒவ்வொரு மிராசுதாருக்கு ஊழியஞ்செய்பவனாயிருப்பான். ஏதாவது அசந்தர்ப்பமேற்பட்டு மிராசுதாரின் வீட்டிக்கு வராமல் போய்விட்டாலோ அவன் பாடு பெத்தபாடுதான். மிராசுதார்கள் தானிய வேளாண்மை ஜாஸ்தியாகச் செய்யும் பக்ஷத்தில் ஆதிதிராவிடர்களுக்கும் தானியங்கள் அறுவடையாகும் காலத்தில் கொஞ்சம் கிடைக்கும். மிராசுதார்கள் தங்கள் குடும்பத்திற்கு ஆற்றுப் பாசனங்களில் உற்பத்தியாகும் நெல்லைத்தான் தங்கள் உணவுக்காக வாங்கிக் கொள்வார்கள். ஆகையால் தங்கள் பூமியில் தானியவேளாண்மையைப் பயிர்செய்யாமல் பருத்தி, புகையிலை முதலிய சாமான்களையே வேளாண்மை செய்வார்கள். இதுகள் களங்களுக்கு வராமலே வீடுபோய்ச் சேர்ந்துவிடுமாகையால் ஆதிதிராவிடர்களுக்கு இதைப்பற்றி யாதொரு வரவு செலவும் கிடையாது. மிராசுதார்களின் பண்ணையாட்கள் சிலர் உயர்ந்த ஜாதி ஏழைகளாகவும், ஆதிதிராவிடர்களாகவும் இருக்கலாம். உயர்ந்த ஜாதி ஏழைக்கு மாதம் ஒன்றுக்கு 24 வள்ளம் கொடுக்கும் பக்ஷத்தில் ஆதிதிராவிடர்களுக்கு 20 வள்ளந்தான் கொடுப்பார்கள். 20 வள்ளம் என்று கொடுப்பது அவர்கள் வீட்டில் போய்ச் சரியான வள்ளம் போட்டு அளந்தால் 15 வள்ளந்தானாகும். ஒவ்வொரு மிராசுதாரின் வீட்டிலும் பண்ணையாட்களுக்குத் தானியம் கொடுப்பதற்கென்றே 3 படி அளவு கொண்ட வள்ளம் ஒன்று இருக்கும். உயர்ந்த ஜாதியார்கள் என்று சொல்லும் மனிதர்கள் தாழ்ந்த ஜாதியென்று சொல்லும் மனிதர்களைப் படுத்தும் கஷ்டங்கள் எழுதுந்தரமன்று.

நமது முன்னோர்கள் தேகாரோக்கியத்திற்கும் மரியாதைக்குமே ஆடையுடுத்தி வந்தாரன்றி டாம்பீகத்திற்கல்ல. அக்காலத்தில் இங்கிலாந்திலிருந்தாவது ஜப்பானிலிருந்தாவது நமது தேசத்திற்கு ஆடைகள் வரவில்லை. அவர்கள் எப்பொருளுக்கும் அந்நிய தேசத்தாரை எதிர்பார்க்க வேண்டிய அவசியமும் இல்லை. முக்கியமாகப் பெரிய மிராசுதார்கள் தங்கள் குடும்பங்களுக்கு வேண்டிய ஆடை

களுக்கு தங்கள் குடும்ப ஸ்திரீகளே தயார் செய்த நூலை நெசவுக்காரரிடம் கொடுத்து அவர்கள் நெய்த ஆடைகளையே தாங்கள் அணிந்துகொள்ளுவார்கள். சாதாரண ஏழைக் குடும்பங்களிலுள்ள ஸ்திரீகளோ சதாகாலமும் நூற்று அந்நூலைக்கொண்டுபோய்ச் சந்தையில் விற்பனை செய்து தங்கள் குடும்பங்களுக்கு வேண்டிய சில்லரைச் செலவுகள் செய்து கொள்வார்கள். இவ்வழக்கமானது 1914-ம் ஆண்டு வரைக்கும் நவீன நாகரிகம் பரவாத சில விடங்களில் நடந்துவந்ததாகத் தெரிகிறது. இவர்கள் சந்தையில் விற்கும் நூலை வியாபாரிகள் வாங்கி ஆடைகளைத் தயார்செய்து அயல் நாடுகளுக்கும் அனுப்பியிருக்கிறார்கள். நமது முன்னோர்கள் நூற்குந் தொழிலை ஆதரித்து வந்ததற்குச் சாட்சியாக இன்றைக்கும் பண விஷயங்களில் யாருக்காவது வழக்கேற்பட்டால் யூர் கொட்டை நூற்றுச் சம்பாதித்தது என்று சொல்லும் பழமொழியும் உண்டு. சமீபகாலம் வரைக்கும் நூல்நூற்றுப் பொருள் சம்பாதித்த ஏழைக்குடும்பங்கள் இச்சமயம் செல்வவந்தர்களாயிருக்கின்றார்கள்.

இப்பேர்க்கொத்த ஆற்றலையுடையவர்களின் காலடியில் வந்த நம்மவரில் சிற்சிலர்க்கு ராட்டினம் என்றாலே காதில் நாராசம் காய்ச்சி விட்டதைப் போலிருக்கின்றதாம். தவிர இவ்விடங்களில் ஆண்கள் நூல் நூற்கக் கூடாதென்றும் அவ்விதம் நூற்றால் குடும்ப விருத்தியாகாதென்றும் சொல்லுவார்கள். எந்த சாஸ்திரத்தில் இருக்குமோ தெரியவில்லை. நமது முன்னோர்களின் பரந்த நோக்கங்களையும் அவர்கள் வாழ்ந்த சுதந்தர வாழ்க்கையையும் பற்றி அவர்களிடம் சொன்னால் நமது முன்னோர்கள் மடையர்களென்றும் அவிவேகிகள் என்றும் சொல்லுவார்கள். தற்கால மேனாட்டு முறைகளைப்பற்றியும் அபாரமாக வர்ணிப்பார்கள். என்னே இவர்களின் மனப்போக்கு! காந்தியடிகளின் உபதேசத்தைத் தேசத்தில் பெரும்பாலான ஜனங்கள் உணர்ந்ததும் டாம்பீகத்தின் மதிப்பும் அந்நிய உடைகளின் மதிப்பும் அகன்றுவிட்டதென்று அன்பர்கள் அறியார் போலும். மேனாட்டு நாகரிகத்தாலும் அந்நிய ஆடைகளினாலும் நமது பாரத தேசமானது பாழடைந்து வருவதை, சகோதரர்களே! இனியாவது உணருங்கள்! நமது முன்னோர்கள் காலத்தில் திரவிய களஞ்சியமாயிருந்த நாடானது இப்போது பிச்சைக்காரர் நாடாயிற்று. இனியொரு இனத்தவரை இரந்து கேட்கும் அடிமைகளாய்விட்டோம். அன்பர்களே! நமது நாடு க்ஷேமமடைய வேண்டுமானால், நமது ஏழைச் சகோதரர்களின் பட்டினியைத் தீர்க்க வேண்டுமானால், நமது மதத்தைக் காப்பாற்ற வேண்டுமானால், நமது முன்னோர்களின் சாபம் நம்மை வந்து அடையாமல் போகவேண்டுமானால், நாமும் நற்கதி பெறவேண்டுமானால், தர்ம நெறியையும் சத்தியத்தையும் நிலை நிறுத்த வேண்டுமானால், பலாத்காரமல்லாத அன்புமயமாய் வாழவேண்டுமானால் காந்தியடிகள் கூறும் அமிர்தச் சொற்களை உங்கள் திருச்செவியில் புகுத்துவீராக.

திராவிடன்.

---

# அகலிகை.

ஏ. சொக்கலிங்கம்பிள்ளை.



## I

### சத்திய லோக வருணனை.

மறையொலிகள் மல்கியதும், ஓமப்புகைகள் வாக வேதிகைகள் யாககுண்டங்கள் நிறைந்ததும், தேவ ரிஷிகள், பிரம ரிஷிகள், இராச ரிஷிகள் முதலான ரிஷிகள் குழாங்கள் விளங்குவதும், நறுமணங் கமழும் மலர்ச் சோலைகள் மதுரமுள்ள பழந்தரும் தருக்கள் முதலியவை மலிந்ததும், அங்கங்கே தாமரை, ஆம்பல், குமுதம், நீலோற்பலம் முதலிய மலர்கள் செறிந்து பொலிவுற்ற தடாகங்கள், நீரோடைகள் முதலியன விளங்குவதும், அரச அன்னங்கள் இன்னிசை பாடும் பறவைகள் முதலியன இன்புற்றுறைவதும், மந்தமாருதத்தால் அலைக்கப்பட்ட வண்டுகள் ஏனைய பறவை இனங்கள் இவற்றின் ஒலியுடையதும், மறையொழுக்க முற்ற நல்லோர் அடைய இருப்பதுமான சத்திய லோகத்தின் நடுவே, கலைவாணி முதலிய தேவியரோடு வீற்றிருக்கும் பிரம தேவர்க்கு ஓர் புதல்வி இருந்தனள்.

### அகலிகையின் வருணனை.

அவள் பெயர் அகலிகை. அவள் மூன்றுலகங்களிலுந் தோற்றமான ஒவ்வொரு பொருளின் அழகெலாந் திரண்டு ஓர் பெண் வடிவாக அமைந்தவளேயாவள். அவளைக்கண்ணுற்ற திருமகளுந் தன் திருமுகந்திரும்பாவண்ணம் அவள் முகவண்ணத்தை எதிட்டுப் பார்த்த வண்ணமே யிருப்பாள். அரம்பை முதலிய தேவ மங்கையர் கண்களுக்கு, அவளழகைக் கண்டு களிப்பதே நல்விருந்தாயிருக்கும். அவளது வனப்பின் மிகுதிப்பாட்டைக் கண்டு, தேவரும், தேவர் தலைவனான இந்திரனும், இருடிகளும் மருண்டு மகிழ்வெய்துவரென்றால் மற்றையர் நிலைமையைக் கேட்பானேன். அவள் வேதங்களிலும் மற்றக் கலைஞானங்களிலும் வல்லவளாயும், அந்நூல்களிற் கூறிய ஒழுக்கங்களிற் சிறிதுந் தவறாது ஒழுகுபவளாயுமிருந்தனள்.

### அகலிகையின் திருமணம்.

அகலிகைக்குக் கடிமணப்பருவம் வர, அதனையறிந்த தேவர் பலரும் ரிஷிகள் பலரும் பிரமதேவரிடம் வந்து ஒவ்வொருவரும் அவளை மணப்பதற்கு மணம் பேசுவாராயினர். அதனைக் கேட்ட பிரமதேவர், "நமது புதல்வியை எவர்க்குக் கொடுப்பது? இஃதென்ன தரும சங்கடமாயிருக்கின்றதே" என்று மனம் வருந்தினவராய்ப் பின்னர் ஒருவாறு மனத்திடங்கொண்டு "எவரொருவர் இப்பூவுலகத்தை மூன்று முறை வலஞ் செய்து முன் வருகின்றனரோ அன்னவருக்கே யான் என் குமாரி அகலிகையை மணமுடித்து வைப்பேன்" என முரசறைவித்தனர். இதனைச் செவியுற்றதும் பிரம புத்திரராகிய நாரதமுனிவர் தமது மகதி யாழைத்தாங்கிப் பூலோகத்திற்கு வந்தனர்; அங்ஙனம் வரும் மார்க்கத்தில் கௌதம முனிவரைச் சந்தித்தார். அப்போது இருவரும் ஒருவரை யொருவர் தழுவி அளவளாவிக் கொண்டனர். பின்னர் யாழ்முனிவர் கௌதமரை நோக்கி "கௌதமரே! தேவரீர் சுகமா? இப்போது எங்குச் செல்கின்றீர்?" என்று வினவவும், கௌதமர் "முனிவர் பெருமானே! தேவரீர் அனுக்கிரகத்தால் நான் சுகமாயிருக்

கின்றேன்; இப்போது சத்திய லோகஞ் செல்கின்றேன்; தமக்குத் தெரியாத உலக வர்த்தமானங்களுமுள்வோ? அங்கே எல்லாச்சாத்திரார்த்தங்களே சரீரமாகவும், அச்சாத்திரார்த்தங்களின் பயனே அழகாகவும், தருமதேவதையின் சுபாவமே சுபாவமாகவும் அமைந்துள்ள அகலிகையின் விவாகத்தை முன்னிட்டே செல்கின்றேன்; அக்காரியம் எவ்வாறு முடிவெய்துமோ யானறியேன்; தேவரீர் திருவருளிருக்குமாயின் முடிவுறாத காரியமேயில்லை" என்றனர். அதனைச் செவியேற்ற நாரத முனிவர் "கௌதமரே! நீர் கவலற்க. அகலிகையின் விவாகத்தைக் கருதியே யான் உம்மிடத்து வந்தேன். அவள் உமக்கு எளிதில் கிடைக்கும் வழியொன்றுளது. அதனைக் கூறுகின்றேன். எவரொருவர் இப்பூவுலகத்தை மூன்று முறை வலம்புரிந்து முன்வருவாரோ அன்னவர்க்கே தம் புதல்வியை மணவினை முடித்துத்தருவதாகப்பிரமதேவர் முரசறைவித்திருக்கின்றனர். அஃது உமக்குந்தெரியும். அக்காரியம் முடித்தற் பொருட்டே விண்ணவரும் அவர்கள் தலைவனான அமரேசனும் தத்தம் ஊர்திகளிவர்ந்து பூவலம் வருதற்குச் சென்றிருக்கின்றனர். இருடிகளிற் பலரும் அதே நோக்கமாகச் சென்றிருக்கின்றனர்; ஆதலின், நீர் எல்லாக் கலைகளையுமுணர்ந்தவர். அவற்றின் முறைப்படி செய்வீராயின் அதுபூவலம் வந்ததையொக்கும். அதனை முடித்து உடனே தேவர்கள் முதலியோர் வருவதன்முன் பிரம தேவரிடஞ்சென்று சங்கதி தெரிவிப்பீராயின் நீர் அகலிகையைப் பெறுவதில் ஐயமில்லை. விரைவிற் சென்று அக்காரியத்தை முடிப்பீராக" என்றனர். அதனைச் செவியுற்ற கௌதமர் மகிழ்ச்சியடைந்து "முனிபுங்கவரே! அந்த முறை இன்னதென்று அடியனுமறிவேன். அஃதாவது முன்னும் பின்னுமாக இரண்டு சிரங்களையுடைய தலையீற்றுப் பசுவை எங்கேனுந்தேடிப் பார்த்து, அதனை மூன்று முறை வலம் வந்து வணங்குவதே பூவலம் வந்ததையொத்ததாகும்; ஆனால், யான் அம்முறைப்படி செய்து பிதாமகனிடஞ் சென்று தெரிவிக்கின், அதனை அவர் ஒப்புவரோ? அல்லது அவர் கட்டளைப்படி பூவலம் வந்தே தீரவேண்டுமென்பது அவர் திருவுளமாமோ என ஐயுறுகின்றேன். அவர் திருவுளப் பாங்கை நீர்தாமறிவீர். அஃதிங்ஙனமென்று அடியேனுக்கு அருளல் வேண்டும்" எனப் பிரார்த்தித்தலும் நாரதர், "கௌதமரே! உள்ளதை உள்ளவாறு கூறுகின்றது எதுவோ அதுவே சாஸ்திரமாகும். அங்ஙனமான சாஸ்திரங்களிற் கூறிய முறைகளெல்லாம் உண்மையேயாகும். 'சாஸ்திரம் பொய் யென்றாற் கிரகணத்தைப் பார்' என்று பெரியோர்கள் கூறியிருக்கின்றனர்; ஆகலின், வேத சாஸ்திரங்களிற் கூறிய ஒவ்வொரு பொருளும் உண்மையேயாகும். அவ்வுண்மையை அறிந்து அதன்படி நடந்துகொள்ளும் ஒருவன் கூறுமிடத்துமன்பதை கூட்டப்பதியாயுள்ள அக்கடவுள் எவ்வாறு மறுத்தற்கூடும்? ஒருக்காலும் மறுக்கார். நீர் இப்போதே சென்று அக்காரியம் முடித்துச் சத்திய லோகம் வருவீராக. யாமும் ஆங்கு வந்திருப்போம்" என்று கூறினர். உடனே கௌதமர் யாழ்முனிவரை வணங்கி விடைபெற்றுக் கொண்டு செல்லும் மார்க்கத்தில் காந்தர்வ நகரத்தை யணுகினர். அங்கே அவர் ஒரு பசுத் தொழுவங்கண்டு கன்றையீனுந் தலையீற்றுப் பசுவைத் தரிசித்து அதனை மூன்று முறை வலஞ் செய்து வணங்கினர். பிறகு சத்தியலோகஞ்சென்று பிரம தேவரைக் கண்டு "சர்வலோகசரண்ய! கௌதமன் நமஸ்கரிக்கின்றேன். தேவரீர் ஆஞ்ஞையின்படி யான் இப்பூவுலகத்தை மூன்று முறை வலஞ் செய்து தங்கள் சந்நிதானத்தின் முன் வந்தெய்தினேன். தேவரீர் அரிய குமாரி அகலிகையை எனக்கே மணமுடித்துத்தால் வேணடும்" என்று

அதிக விநயத்தோடு தொழுது நின்றனர். அதனைக் கேட்ட பாரதி கொழுனர் வியப்புற்று "எவ்வாறு இவ்வளவு விரைவில் பூவலம் வருதலை இவ்விருடிகள் முடித்தனர்" என்று ஆங்கு வீற்றிருந்த நாரதனை வினவலும், அவர் கௌதமரை நோக்கி "கௌதமரே! நீரெவ்வாறு பூவலஞ்செய்து வந்தீரென்பதைப் பிதாமகற்கு உரைப்பீராக" எனலும், கௌதமர் நான்முகனை நோக்கிக் "கலைமகட்கு ஒரு நாவைக் காணியாகக் கொடுத்த கமலாசனக்கடவுளே! அடியேன் தேவரீர் புதல்வியின் விவாகத்தைக் கேள்வியுற்றதும், பூவலம் வருதற்குப் பிரயாணப்பட்டு வரும் வழியில் காந்தருவ நகரத்தில் ஒரு தொழுவத்திடை ஒரு தலையீற்றுப் பசு கருப்ப வேதனையோடிருந்ததையறிந்து அங்குச் சென்றேன். அஃதெனக்கு ஏற்றருணமாயிருந்தது. அப்போது கன்றின் சிரம் உதயமாயிற்று. அதனைத் தரிசித்து அத்தாய்ப் பசுவினை மூன்று முறை வலஞ்செய்து வணங்கித் திரும்பி வந்தேன். யான் அவ்வாறு செய்தது பூவலம் வந்ததை யொக்கும். அது தேவரீரருளிய "சாஸ்திர முறைபே யாகும். வேத சம்மதமுமாம். ஆதலின், உமது அரும்புதல்வியாகிய சிகாமணியை யானே சூடிக்கொள்ள வுரியவன்" என்று கூறினர். இதனைச் செவியேற்ற வாணி கேள்வர் "கௌதமோத்தமரே! நீர் செய்தக் காரியம் நியாயமானதேயாம். எமது குமாரி அகலிகை உமக்கே யுரியவளாவள்" என்று உறுதி மொழி பகர்ந்து, நாரதனை அழைத்து "எமது குழந்தை அகலிகையின் திருமண முடித்தற்கு வேண்டியவற்றைச் சித்தஞ் செய்வீராக" எனலும், உடனே நாரதர் அவ்வாறே எல்லாவற்றையுஞ் சித்தஞ்செய்தனர். பூவலஞ் செய்தற்குச் சென்றிருந்த தேவர், ரிஷிகள் சித்த வித்தியாதரர் முதலாயினோர் தவிர மற்றத் தேவர், ரிஷிகள் முதலியோர் பலரும் வதுவை மண்டபத்தே வந்து கூடினர். தேவமங்கையர் அழகுக்கு அழகு செய்வார்போல அகலிகையை மலர் மாலை முத்து மாலை இரத்தினாபரண முதலிய வற்றால் அலங்கரித்துப் புண்ணியகரமான மண்டபத்தில் வீற்றிருக்குங் கௌதமர் பக்கத்தே அமரச்செய்தனர். மங்கள வாத்தியங்கள் முழங்க விவாகச் சடங்குகள் முடிந்தன. பின்னர் சதுரானனர் தம்மனைவியோடிருந்து அகலிகையைக் கையிற் பிடித்து "முனிபுங்கவரே! எங்கள் அருந்தவப் புதல்வி அகலிகையை உமக்கு மணமகளாகத் தருகின்றோம்; அவளை அன்புடன் அங்கீகரிக்கக்கடவீர்" என்று கௌதமருடைய கரங்களில் உதக பூர்வமாக அக்ஷதையுடன் அர்ப்பணஞ் செய்து அகங்களித்தனர். அவ்வாறு மணக்கோலத்தோடு வீற்றிருக்கும் தம்பதிகள், நோக்கினர் கண்களுக்கு மலைவளர் காதலியும் அவள் கொழுநனும் போல விளங்கினர். எல்லோரும் வாழ்த்து மொழி கூறினர். தேவமங்கையர் மங்களப்பாட்டுக்கள் பாடினர். வானவர் பூமாரிபெய்தனர், மணமகனும் மணமகளும் மாலை மாற்றுந்தருணத்தில் பூவலங்கருதிச் சென்ற தேவரும் தேவர் தலைவனான இந்திரனும் ரிஷிகள் முதலாயினோரும் அங்கு வந்து சேர்ந்தனர்.

அவர்கள் அத்திருமணக்கோலத்தைக் கண்டு "கௌதமரை நாங்கள் பார்க்கவில்லையே, இவர் எவ்வாறு எங்கட்கு முன் பூவல முடித்து வந்தனர்" என்று ஒருவரோடொருவர் அதிசயித்துப் பேசிக்கொண்டனர். அப்போது அவர்களுள் பெருங்குழப்ப முண்டாயிற்று. அதனைக் கண்ட யாழ்முனிவர் அவர்களுக்குக் கௌதமர் செய்த காரியங்களை விளக்கக்கூறி அவர்களைச் சாந்தப்படுத்தித் தத்தம் இருக்கைகளில் வீற்றிருக்கச் செய்தனர். அவர்களுடைய கண்களாகிய தாமரைகள், அகலிகை யணிந்திருக்குந் தேன் துளிக்கும் மாலை மீதும், முகமாகிய கஞ்ச மலர் மீதும், கண்களாகிய

நீலமலர் மீதும், வாயாகிய செவ்வாம்பல் மீதும், நாசியாகிய குமுதமலர் மீதும், கையாகிய காந்தள் மலர் மீதும், பாதங்களாகிய பதுமங்கள் மீதும் பூத்தன். பின்னர் அகலிகை தானணிந்துள்ள மாலையைத் தன்னழகிய கரங்களாலெடுத்துக் கௌதமருக் கணிந்த போது அவர்களனைவரும் முக மலர்ச்சிகுன்றித் தத்தம் இருக்கையை யடைந்தனர். இந்திரன் தவிர மற்றத் தேவரும் ரிஷிகள் முதலாயினோரும் அகலிகையின் வடிவத்தைத் தங்கள் மனத்தினின்றும் அப்போதே நீக்கிக்கொண்டனர். ஆனால் இந்திரன் மாத்திரம் பெண்களிலே பெருவனப்புவாய்ந்த அகலிகையின் அழகிய உருவத்தைத் தன் மனத்திலிருத்திக்கொண்டேகினன். பின்னர் பிரமதேவர் தம் அருமருந்தன்னச் செல்வ மக்கட்குச் சிருஞ்சிறப்புஞ் செய்து, இல்லற தருமங்களை யெடுத்துக் கூறிப் புத்தி புகட்டிக் கௌதமரைப் பார்த்து "ஐய! இவள் இற்றைநாள் வரையும் எங்களுக்கு ஆருயிராயிருந்தனள். அவ்வுயிர் போல்வாளை இப்போது நாங்கள் உம்மோடனுப்புகின்றோம். நீர் இப்பெண்மணியோடு எந்நாளும் இன்புற்று வாழ்ந்து வரக்கடவீர்" என்று இருவரையும் பலவாறு வாழ்த்தினர். மணப்பெண்ணும் மணப்பிள்ளையும் பிரமதேவரையும், கலைவாணி முதலிய தாய்மார்களையும் நாரதமுனிவரையும் மற்றத்தேவர் ரிஷிகளையும் வணங்கி அவர்களிடம் விடைபெற்றுத் தங்கள் ஆச்சிரமஞ் செல்வாராயினர்.

(இன்னும் வரும்.)

श्रीः

## ॥ श्री सरस्वतिद्वादशमञ्जरी ॥

(சகோதரி வி. பாலம்மாள்).

वाणीं पुस्तकपाणिं वेणीजितनीलनीरदश्रेणिम् ।
चञ्चलनयनजितैणिं वीणापाणिं नमामि गीर्वाणीम् ॥ १ ॥

कान्त्युज्जीवितमदनां राजद्राकाशशाङ्कनिभवदनाम् ।
कुन्दकुसुमसमरदनां नमामि नालीक जन्ममुखसदनाम् ॥ २ ॥

वीणागानविलोलां मृगमदतिलकोज्वलद्रुचिरफालाम् ।
वन्दे सुन्दरशीलां लालितलीलाशुकैक भुजनालाम् ॥ ३ ॥

भ्राजन्मुक्ताहारान् सुवर्णकुंभापहासिकुचभारान् ।
मुखजितचन्द्राकारान् कान्तशरीरान् नमामि विधिदारान् ॥ ४ ॥

नतजनकृतसान्निध्यां सकलविशुध्दात्मभिः सदाऽऽराध्याम् ।
कविगुणनिगळ निबध्यां सद्गुणसाध्यां नमामि तनुमध्याम् ॥ ५ ॥

कटितट विलसत्कांचीमलिरव सन्निभलसत्स्वरविपञ्चीं ।
सन्मति पेटीकुञ्चीं वन्दे सौन्दर्य वंचितविरिञ्चिं ॥ ६ ॥

आद्यांत्रिभुवनहृद्यां सहृदयहृदयैः कविश्वरैर्वेद्यां ।
निश्चलचित्ताराध्यां तामन वद्यां नमाम्यहंविद्यां ॥ ७ ॥

स फलमनोरथभक्तां करुणाद्रापांगरम्य दृग्युक्तां ।
सृष्टिस्थितिविधिशक्तां पालितारिक्तां नमामि विधिसक्तां ॥ ८ ॥

परिहृतनतजनकष्टां भक्ताभीष्टप्रदानविधितुष्टां ।
निखिलागमपथजुष्टां कृपयाऽविष्टां नमाम्यहं तुष्टां ॥ ९ ॥

पूरितबुधजनकामां तामभिरामां चतुर्वदनरामां ।
श्रुतिततिशिरोललामां मध्यक्षामां भजे वचः सीमां ॥ १० ॥

शतश्रुतिमुखकृतवासां भक्तप्रकटीकृतात्मसुविलासां ।
शीतकरधवळहासां सुन्दरवासां भजे निधि भासां ॥ ११ ॥

वीणास्वनजितभृंगां नतजनतापत्रयापहापांगां ।
कमलासनाङ्कसङ्गां वन्दे वेदैक वेद्यगुणतुंगां ॥ १२ ॥

॥ इति संपूर्णम् ॥

Composed by Sister V. BALAMMAL.

# தீபாவளி.

இந்துக்கள், அதிலும் விசேஷமாகப் பிராமணர்கள், அநேக பண்டிகைகளை அடிக்கடி கொண்டாடுகின்றனர். அப்பண்டிகைகள் எதற்காக ஏற்பட்டனவெறும், எப்பொழுது ஏற்பட்டனவென்றும், அவைகளை நாம் ஏன் கொண்டாடவேண்டுமென்றும், இது போன்ற அநேக விஷயங்களைத் தெரிந்துகொள்ள முயலாமல் தொன்றுதொட்டு நம் முன்னோர்கள் காலம் முதற்கொண்டு அநேக பண்டிகைகள் கொண்டாடுவது நம் குடும்பத்தில் வழக்கமாய் இருக்கின்றது. ஆகையால் நாம் செய்யக் கடமைப்பட்டிருக்கிறோம் என்று நினைத்துச் செய்வதினால் பிரயோஜன மொன்றுமில்லை.

அன்றியும் ஒவ்வொரு தேசத்திலும் ஒவ்வொரு ஜாதியிலும் பண்டிகைகளை ஒவ்வொரு விதமாகக் கொண்டாடுகிறார்கள். மேலும் தற்கால நாகரிகத்தில் மூழ்கி ஆங்கிலர் நடையுடை பாவனை முதலிய மேல் நாட்டாரின் நாகரிகங்களை அனுசரிக்கும் நம்மவரில் சிலர் இவைகளை ஆக்ஷேபிக்கின்றார்கள். அவ்வாக்ஷேபங்களுக்குப் பதிலளிக்க முயல்வதுசற்று சிரமமாகத்தான் தோன்றுகிறது. இருந்தாலும், இம்மாதக் கடைசியில் நடைபெறப் போகும் தீபாவளியைப் பற்றிச் சிறிதெடுத்துரைக்க விரும்புகிறோம்.

நம்மவர்கள் இத்தீபாவளிப் பண்டிகையை நான்கு நாள் கொண்டாடுவது வழக்கமாய் இருந்துகொண்டு வருகிறது.

## முதல்நாள்.

தீபாவளிப் பண்டிகையின் முதல் நாளுக்கு "நரகசதுர்தசி" என்று பெயர். நரக சதுர்தசி என்ற பெயரை உச்சரித்தமாத்திரத்திலே சாமான்னியமாகச் சில எண்ணங்கள் நம்மனதில் ஜனிக்கின்றன. இச்சரித்திரத்தை ஆதியோடந்தமாக "பிரம்ம வைவர்த புராணம்," கிருஷ்ண ஜன்மகண்டத்தில் 152 அத்தியாயம் முதல் விஸ்தாரமாயும் அழகாயும் சொல்லப்பட்டிருக்கிறது.

இவ்வுலகத்தில் ஸ்ரீ கண்ணபிரான் அவதரித்த பிறகுதான் இப்பண்டிகை ஏற்பட்டது.

ஸ்ரீ பகவான் மனுஷிய ரூபத்துடன் துவாரகையில் வசித்துஜகத்தைப்பரிபாலனஞ்செய்து வருந் தருவாயில் பிராக்ஜோதிஷம் (அதாவது தற்காலம் பூதான் என்று சொல்லப்படும்) தேசத்தை ஆண்டுகொண்டுவந்த நரகன் என்ற ஓரசுரன் நம் பாரத பூமியிலுள்ள எல்லா அரசாங்கத்திலும் புகுந்து அங்குள்ள அழகு பொருந்திய ராஜ கன்னிகைகளையும், அன்றியும் மகா சௌந்தரியம் வாய்ந்த பெண்களையும் பலாத்காரமாக அபகரித்துக் கொண்டும் திருடிக்கொண்டும்போய் அவர்களைப் பலவந்தப்படுத்தி விவாகம் செய்து கொள்ள முயன்ற பொழுது, அக்கன்னிகைகள் தங்களுடைய ஜாதி, குலம், கௌரவம் முதலியவற்றை நினைத்துக்கொண்டு புலம்பி இந்நீசனான அசுரனைக் கலியாணம் செய்துக்கொள்ள மறுத்துவிட்டனர். இப்படி மறுத்துவிட்ட அனைவரையும் சிறையிலடைத்து அவன் ஹிம்சித்துக் கொண்டிருந்தான்.

இம்மாதிரி ஆயிரக் கணக்கானவர்களைச் சிறையிலிட்டிருந்தான். இவ்வசுரன் மிக்க பராக்கிரமசாலியாயும், வரப்பிரசாதம் பெற்றும், மலைப்பிரதேசத்தில் வசித்தும் இருந்ததினால் மற்ற அரசர்கள் யாவராலும் அவனை வெல்ல முடியவில்லை. ஆனால் தம் வயற்றில் பிறந்த பெண் குழந்தைகளைப் பறிகொடுத்துத் துக்கத்தில் மூழ்கி இதைச் சகியாமல் எல்லாரும் ஒன்று கூடித் துவாரகையில் துஷ்ட நிக்கிரகார்த்தம் அவதரித்துள்ள ஸ்ரீ கண்ணபிரானிடம் சென்று முறையிட்டனர்.

அப்போது ஸ்ரீகிருஷ்ணன் அவர்களுடைய வேண்டுகோளுக் கிணங்கி துவ்ராகையினின்

றும் புரட்டாசிமீ சுக்கிலத் துவாதசி (அதாவது, தசராவுக் கடுத்துவரும் துவாதசி) தினத்தன்று புறப்பட்டு நரகாசுரனை நாடிச்சென்று அவனுடன் கடும்போர் புரிந்து 17-வது நாள் சங்கரித்து அங்கு சிறையிலடைபட்டிருந்த கன்னிமார்களை விடுவித்து அவரவர் தங்கள் இல்லம் அடையும்படி வேண்டிய சௌகரியங்களை ஏற்படுத்தி அவர்களை அனுப்பும் தருவாயில் அவ்விளங்குமரிகள் ஒன்று கூடி நமக்காக இவ்வளவு சிரமம் எடுத்துக்கொண்டு நம்முயிரையும் கௌரவத்தையும் காப்பாற்றிய இவ்வீர சிகாமணியைத்தான் நாங்களனைவரும் மணம் புரிவோம் என்று சபதம் செய்து கொண்டார்கள். இது இவ்வாறு இருக்க, தத்தம் மக்களை இழந்த அரசர்கள் நரகாசுரனுடைய பட்டணத்தை நோக்கிச் சென்றுகொண்டிருக்குந் தருவாயில் நரகாசுரன் மாண்ட சமாசாரத்தைக் கேழ்வியுற்று அதிவிரைவாக நரகாசுர பட்டணமடைந்து நடந்தேறிய விருத்தாந்தத்தை ஆதியோடந்தமாகக் கேழ்வியுற்றார்கள்.

பிறகு தத்தம் மக்கள் மனோபாவனைப்படி அன்ற ராத்திரியில் தங்கள் தங்கள் பெண்களை முறையே ஸ்ரீ கண்ணபிரானுக்குப் பாணிக்கிரகணம் செய்து கொடுத்தனர்.

அன்றைய தினம் அக்கொடிய நரகாசுரன் கொல்லப்பட்டதினால், எங்கு பார்த்தாலும் அவ்வவ்வரசர்கள் தங்கள் தங்கள் புதல்விகளுடைய கலியாண மகோற்சவத்தை வெகு சிறப்பாகக் கொண்டாடினார்கள். அப்பொழுது நகர் முழுதும் மணக்கோலமும் மண வறையுமாக விளங்கிக் கொண்டிருந்தது. அக்கலியாண வைபவத்தை ஆயிரம் நாப்படைத்த ஆதிசேஷனும் வர்ணிக்க முடியாதென்றால் நம்மெழுதுகோலால் எவ்வாறு வர்ணிக்க முடியும்!

இப்பண்டிகை நம்முடைய பதிவிரதா ஸ்திரீகளின் ஞாபகார்த்தத்தைக் குறிக்கின்ற தினமாகும். மிகுந்த ஆபத்தான காலத்திலும் அவர்கள் தங்களுடைய பதிவிரதா தர்மத்தைக் காப்பாற்றி உலகத்திற்குத் தங்கள் மனோநிலையைத் தெளிவுபடுத்தியிருக்கிறார்கள். அத்தினத்தை நம்மவர்கள் பண்டிகையாகக் கொண்டாடி அவரவர்களுடைய மருமகப் பிள்ளைகளை அழைத்து விருந்திட்டு உபசரித்துப் புது ஆடையாபரணங்களை வாங்கிக் கொடுத்து அணியச்சொல்லுவார்கள். அல்லாமலும், அத்தினத்தை மிகவும் சந்தோஷமாகக் கழிப்பார்கள்.

அன்றியும் அந்நரகாசுரன் மீது கண்ணன் யுத்தத்திற்குப் புறப்பட்டநாள் முதற்கொண்டு சிலர் கந்தமூலங்களையுட்கொண்டு ஸ்ரீகிருஷ்ணனுக்குப் பூரணஜயம் கிடைக்க வேண்டுமென்று சதா பகவானை துதித்து வந்தார்கள். அக்காலத்தில் கையாண்ட இக்கடும் விரதத்தை இப்பொழுதும் மகாராஷ்டிரர்கள் பயபக்தியுடன் அனுஷ்டித்து வருகிறார்கள்.

மேலும், இத்தினத்தன்று ரஜபுதானாவில் இப்பொழுதும் கன்னிகைகளுக்கு மங்கள ஸ்நானம் செய்வித்துப் புது ஆடையாபரணங்களைத் தானமாகக் கொடுக்கப்பட்டு வருவது வழக்கமாயிருக்கிறது.

(தொடரும்.)

## குழந்தை வளர்த்தல்.

ஒவ்வொரு பெண்மகளும் தான் மலடி என்று பெயரெடுக்காம லிருத்தலையே கோருவது சகஜம். வீட்டிற்கழகு குழந்தைகள் தான் என்று கவிவாணர் வருணிக்கிறார்கள். சந்ததியற்ற ஜன்மம் வீணாய்விடுகிறதென்று சாஸ்திரங்களும் கூறுகின்றன. சதாரணமாக ஒவ்வொரு குடும்பம் மற்ற விஷயங்களில் எவ்வளவோ மேன்மையும் பிரபலமும் அடைந்

திருப்பினும் குழந்தையில்லாக் காரணத்தினால் இருந்தவிடந் தெரியாது காலாந்தரத்தில் மறைந்துவிடுதலையும் நாம் கண் கூடாகக் காண்கிறோம். குழந்தையைப் பெறுவதில் பணக்காரர் ஏழை என்ற வித்யாசங்களில்லை. ஏனெனில் பிரபுக்கள் தமது செல்வத்திற்கும் நிலைமைக்கும் சந்ததி விரும்புதல் போலவே ஏழை மக்களும் விரும்புகிறார்கள். ஐசுவரியமென்பது ஒரு சிலரால் அடையக்கூடியதாயிருந்தாலு மிருக்கலாம். மக்கட் செல்வம் எல்லோராலும் விரும்பக் கூடியதாகவிருக்கிறது. முற்றும் துறந்த முனிவர் பெருமானாகிய வேதவியாசர் தம் குழந்தை சுகப்பிரம மத்தினிடத்தில் காட்டிய வாஞ்சையும் தசரத சக்கிரவர்த்தி பிள்ளையைப் பிரிந்ததாலுற்ற துன்பமும் கொஞ்சமா? தனது கற்பைச் சோதிக்கவந்த திரு மூர்த்திகளை இளங்குழவியாக்கித் தாலாட்டிய அனசூயா தேவியானவள் அக்குழந்தைகளைப் பிரிய மனம் வருந்தினாள். இளஞ் சூரியனைக் கனியென்று தாவிப் பிடிக்கச் சென்ற ஹனுமானைத் தேவேந்திரன் வச்சிராயுதத்தினால் அடித்த காலை இதைச் சகியாது வாயுபகவான் தமது தொழிலை நிறுத்திக் கொண்டு ஜீவராசிகளை எல்லாம் தத்தளிக்கச் செய்து தமது மைந்தன் மீண்டும் திடசரீரியாய் எழுந்தபின்பே மனங்குளிர்ந்தார். சக்தி ரூபமாய் விளங்கும் பார்வதீதேவியார் தமக்குப் பிள்ளையில்லாமற் செய்ததனால் முப்பத்து முக்கோடி தேவர்களுக்கும் பிள்ளையில்லாமற் போகக்கடவதென்று சபித்தார். இவ்விதமாகத் தேவாதி தேவர்களும் மற்றவர்களும் குழந்தை விஷயத்தில் ஆர்வம் கொண்டவர்கள் என்று ஏற்படும்பொழுது மனிதர்கள் சந்ததியைக் கோருவது அதிசயமல்ல. வம்சம் விளங்க வேண்டும். குலப்பெயர் அழியாதிருத்தல் வேண்டும். தமது செல்வம் பராதீனமாகி விடாமலிருத்தல் வேண்டும். தம்மை வயது காலத்தில் ஆதரிக்கவேண்டும். முடிவில் ஈமக்கடன்களை முடித்துப் பரலோகத்திலும் நல்ல கதியைக் காட்டவேண்டும். இத்தகைய அளவற்ற கோரிக்கைகளுக்கு ஆதாரமாயிருக்கும் சந்ததியை விரும்பாதார் யார்? ஆனால் குழந்தை பெறுவதில் ஆசையிருக்கிறதன்றி அவைகளைச் செம்மையாய் வளர்ப்பதில் பெற்றோர்கள் தக்கபடி கவனம் செலுத்துவது மட்டும் மிகக் குறைவேயாகும். பொதுவாய்க் குழந்தைகளை வளர்த்தல் இருவகைப்படும். ஒன்று அவைகளின் பாலியப் பருவத்தில் ஆகார முறைகளில் சரிவரக் கவனித்து ஆரோக்கியத்துடன் வளரச் செய்தல். மற்றொன்று அவர்கள் கல்வி கேள்விகளிற் சிறப்புற்று மேன்மையாய் அவர்களின் வாழ் நாட்கள் முழுதும் சந்தோஷமாகக் கழிக்க வழிதேடல். ஆக இவ்விருவகைகளிலும் பெற்றோர் முழு நோக்கத்தையும் செலுத்தித் தமது குழந்தைகளை வளர்க்கக் கடமைப்பட்டிருக்கிறார்கள். இக்கடமையினின்றும் தவறுங்கால் மக்களுக்குச் சத்துரு மாதா பிதா என்று வசைச்சொல் ஏற்பட்டு விடக்கூடும். ஆதலால் இவ்விருவகையிலும் பெற்ற தாய்க்குள்ள பொறுப்பு அளவு கடந்ததாகும். தாய்மார்கள் இதையுணர்ந்து நடப்பார்களானால் சிசுக்கள் மாணம் அதிகரிக்கவும் இடமில்லை. பருவ வயதில் பிறர் நகைத்துப் பரிகசித்து நிந்தித்துப் பகைக்கக்கூடிய துர்க்குணங்களும் துராப்பியாசங்களும் ஏற்படா. தனக்கொரு குழந்தை வேண்டுமென்ற ஆவலும் அஃதில்லாவிடின் மன வேதனையையும் அடையும் பெண் குழந்தை பிறந்ததும் அதை எவ்விதம் ஆதரிக்க வேண்டுமென்பதை யறியாமையினாலேயே கட்டி, சுரம், மாந்தம், வயிற்றுளைவு முதலிய பலகாரணங்களால் சிசுக்கள் ஒரு வயதிற்குள்ளும் இரண்டு வயதிற்குள்ளுமாக மரணமடைந்து விடுகின்றன. குழந்தையின் மீதுள்ள அபிமானத்தையே காரணமாகக் கொண்டு அதை நோய்க்காளாக்கி விடக்கூடிய தாய்மார்களே அதிகமாகக் காணப்படுகிறார்கள். அதிகம் ஊட்டி வளர்த்தால் குழந்தை

அதிசீக்கிரம் பெருத்து வளர்ந்து விடுமென்பதே இவர்களபிப்பிராயமாக விருக்கிறது. இதற்கடுத்தபடியாக அறியாமையினாலும் குழந்தைகளைப் பாழ்படுத்துவதையும் காணலாம். ஆக அன்பாலும் அறியாமையாலுமே தாய்மார்கள் தமதிளங் குழந்தைகளைச் சரியாய் வளர்க்காமலிருந்து விடுகிறார்கள். ஆயுள் பலத்தால் சில இவ்வாபத்தினின்றும் நீங்கி உயிர்த்திருந்தாலும் பிறகு கல்வி கேள்விகளில் உயர்வடையாமல் தாழ்ந்த நிலைமையிலேயே இருத்தலையும் நாம் காண்கிறோம்.

மேற்கண்ட இருவகையில் தனவந்தர் வீட்டுப் பெண்கள் இளஞ் சிசுக்களை வளர்ப்பதிலும், ஏழைகள் தக்க வயதில் தக்க கல்விப் பயிர்ச்சி யளிப்பதிலும் பெருந்தவறு இழைக்கின்றார்கள். தனவந்தர் குழந்தை இளம் பருவத்திலும், ஏழை மக்கள் பருவ வயதிலும் செழிப்பற்றிருப்பதை நாம் காணலாம்.

இதன் காரண மென்ன வென்பதை கவனிப்போம். சாதாரணமாக ஒரு தனவான் வீட்டில் குழந்தை பிறக்குமானால் அது அநேகமாகச் செல்வப்பெருக்கால் கூலிக்கு வேலை செய்யும் வேலையாட்கள் வசம் வளருவதன்றிப் பெற்ற தாயின் மேன்பார்வை அதற்கு எப்பொழுதும் ஏற்படுவதில்லை, அன்பு மயமாக விருக்கும் தாயின் மடியில் அவள் போஷணையில் வளர வேண்டிய அக்குழந்தை வேண்டா வெறுப்பாக மாதச் சம்பளத்தை மனதில் கணக்கிடும் வேலையாள் வசம் வேற்றுமைப் பான்மையிலேயே வளரும் காரணத்தால் சில பருவ வயதடைந்த காலத்தும் பெற்றோர், சகோதரர், பெரியோர், நண்பர், ஆசிரியர், ஏழைமக்கள் என்ற அன்பும் அனுதாபமுமின்றி ஒரு சமயம் சுய நலம் ஒன்றையே கருதியவர்களாக அதிலும் வெற்றி பெறாது கண்கலங்க நேரிட்டு விடவும் கூடும்.

அன்றாடம் பிச்சைபெடுத்து வயிர்வளர்க்கும் பிச்சைக்காரிப் பெண்ணின் இடுப்பிலுள்ள குழந்தை அழகாயும் சுருசுருப்புடனும் புஷ்டியாயும் தக்க வளர்ச்சி யுடனுமிருக்கும் காரண மென்ன? தாய்ப் பாலிலும் மிதஆகாரத்திலும் எல்லாவற்றிலுமுயர்ந்த மெய்யன்பும் உருக்கமும் வாய்ந்த தாய் உற்று நோக்கும் பார்வையிலும் அக்குழந்தை வளர்வதே அதன் செழுமைக்குக் காரணமாகிறது.

கல்விப்பயிர்ச்சி விஷயத்தில் ஏழைகளுக்குப்போதிய உபகாரணங்களில்லாமையால் பிற்காலத்தில் ஏழ்மையிலும் தாழ்மையிலும் வாடி வதங்கி நோயுற்று நல்வழக்க மற்று நற்சகவாசத்திற்கும் சந்தர்ப்பமற்று மனித வாழ்க்கையின் லக்ஷியங்களை அடைய முடியாமல் போய் விடுகின்றது. தனவந்தர்கள் குழந்தைகள் தட்டிக்கொட்டி நோய் நொடிகளுக்குத் தப்பி விட்டால் பிறகு கல்விப் பயிர்ச்சியில் சிரமமெடுக்கத்தக்க அவகாசமும் பொருளுதவியும் பெற்றிருப்பதால் ஒருவிதமாக ஜன சமூகங்களிடையே மேன்மையாகக் காலங் கழிக்கவும் இடமுண்டாகிறது.

தனவான் வீட்டுக் குழந்தைகளெல்லாம் பாலியத்தில் செழுமையாகவும் ஏழை மக்கள் பருவகாலத்தில் சிரமமின்றி கல்வி யறிவு பெற்றும் விளங்குவார்களாயின் ஜன சமூக அபிவிருத்திக்கும் முன்னேற்றத்திற்கும் வேறு வழிதேடல் அனாவசியமே. இதற்குப் பொதுவாய்ப் பெண் மக்கட்குரிய படிப்பும் கூடிய சீக்கிரத்தில் ஜீவனோபாயத்தை யளிக்கக் கூடிய கட்டாய இலவசக் கல்வியும் ஏற்ற சாதனங்களாகும். குழந்தைகளை அகால மரணத்திற்கு உள்ளாக்காமலும் தக்க வயதில் நற்போதனைகளை அடையச் செய்வதற்கும் தாய்மார்களே காரணமாயிருப்பதுடன் இளமையிலேயே அதற்கேற்ற வழியில் குழந்தைகளை வளர்த்தலென்பது சிறந்த பாடங்களில் ஒன்றெனக் குறிப்பிட்டு அதற்குரியனவைகளை மறுமுறை கவனிப்போம்.

லோகநாயகி.

# தீபாவளிச் சேலை.

## ஒரு சம்பாஷணை.

### ஞானம்பாளும் எதிர்வீட்டு யோகாம்பாளும்.

ஞானம்.—என்ன யோகாம்பா, எங்கள் வீட்டிற்கு முந்தி எல்லாம் அடிக்கடி வருவாயே. இப்போது உன்னைத் தெருவாயிற்படியில் நிற்கவும் காணக்கிடைப்பதில்லையே.

யோகம்.—எனக்கிப்பொழுது சாவகாசப்படுகிறதேயில்லை. என்னை முன் யோகாம்பாள் என்று எண்ணாதே.

ஞானம்.—என்னடியம்மா அவ்வளவு வேலை. புருஷன் பெண்டாட்டி இரண்டு தேகம். குஞ்சா குழந்தையா. அரைப்படி அரிசி அன்னதானத்திற்கு விடிய விடிய மேள தாளமாம். அதுபோலிருக்கு உனக்கு ஒழியவில்லை என்பதும்.

யோகம்.—இவ்வளவுதானா, இன்னம் பேசுவாயோ. சொல்லு சொல்லு. இன்னம் சொல்லடியம்மா சொல்லு.

ஞானம்.—நீ புது நாடக மனுஷி. நான் கர்நாடக மனுஷியானதினாலே எழுதப் படிக்க ஒன்றுமே தெரியாமல் வீட்டுவேலை செய்து அலுத்த சமயம் மாடுபோல் தூங்கி விழுகிறேன். உனக்கென்ன. உன் புருஷன் கட்டுக்கட்டாக புஸ்தகங்களை வாங்கித் தருவான். நீ படிப்பாய். அதனாலேதான் உனக்கு ஒழியவில்லை.

யோகம்.—இல்லையடி. கண்ட கதைகளை எல்லாம் நான் படிப்பதுமில்லை; எங்கள் வீட்டுக்காரர் அவைகளை வாங்கி வரவும்மாட்டார்.

ஞானம்.—சரி, பூநூல்களை வைத்துக்கொண்டு சவுக்கங்கள் போடுவாய்.

யோகம்.—அதுவு மில்லை. பிறகு என்ன காரணமாயிருக்கும் சொல்லு பார்ப்போம்.

ஞானம்.—ஆனால் வீட்டிற்குள்ளேயே அடைந்து கொண்டு நீ என்னதான் செய்கிறாய்? உன் புருஷனோ ஆபீசுக்குப் போய்விடுகிறார். பேச்சுத் துணையுமில்லாமல் உனக்கு எப்படித்தான் பொழுது போகிறது?

யோகம்.—நான் இப்பொழுது வீட்டு வேலைகள் போக ஒழிந்த நேரங்களில் நூல் நூற்கிறேன்.

ஞானம்.—என்ன, நூல் நூற்கிறாயா! இதென்ன புதுமை! சேணியர்கள் அல்லவா நூல் நூற்பார்கள். நம்ம ஜாதிக்கு அது வழக்கமில்லையே.

யோகம்.—ஜாதியாவது வழக்கமாவது, உனக்கெல்லாம் தெரியுமோ. முன் காலத்தில் எல்லாருந்தான் நூல் நூற்றுக் கொண்டிருந்தார்கள்.

ஞானம்.—எல்லாரும் நூற்று என்ன செய்கிறது?

யோகம்.—நெசவுகாரரிடம் கொடுத்து நெய்யச் சொல்லி அதைக் கட்டிக்கொள்ளுகிறது.

ஞானம்.—ஏன் கடைகளில் அழகு அழகாய் புதிது புதிதாய் தினுசு தினுசாய்ப் புடவைகள் அடுக்கிக் கிடக்கும்போது நாமேன் நூல் நூற்று நெய்யச் சொல்லி அதற்குச் சாயமேற்றிக் கட்டிக்கொள்ளவேண்டும்?

யோகம்.—அவைகளெல்லாம் நம் நாட்டுத் துணிகளைப்போல் உறுதியாயும் மலிவாயுமிருப்பதில்லை.

ஞானம்.—அடி போடி, பைத்தியக்காரி, தினம் பொழுதுவிடிந்தால் தெருவில் மூட்டை மூட்டையாக எவ்வளவு மல் சேலைகள் விதம் விதமாய் விற்கப்படுகின்றன பார்.

யோகம்.—ஒழிந்த வேளையில் நூல் நூற்று அதை நெய்யச் சொன்னால் அது எவ்வளவு லாபம் பார். ஒழிந்த வேளையில் நூல் நூற்பது ஒரு பொழுது போக்கியாகவுமிருக்கும்.

ஞானம்.—அதென்னமோ அம்மா. எனக்குப் பொழுது விடிந்தால் வீட்டுவேலைகளும் குழந்தைகளைக் கவனித்தலும் ஓயா வேலையாயிருக்கிறது.

யோகம்.—நூல் நூற்க உனக்கு ஒய்வில்லையானால் போகட்டும். அடுத்தவாரம் தீபாவளியாயிற்றே. என்ன மாதிரிப் புடவை வாங்கிக்கொள்ளப் போகிறாய்.

ஞானம்.—எனக்கு ரொம்பநாளாக பாலாமணிக் கோட்டடிப்புடவை கட்ட வேண்டுமென்று ஆசையாயிருக்கு. கோடிவீட்டுக் கமலாம்பாள் அம்மாதிரி கட்டிக்கொண்டிருந்தாள். தோய்க்கத் தோய்க்கப் பச்சிலை போல் பளபளவென்றிருந்தது. அதே மாதிரியில்தான் நான் இந்த தீபாவளிக்கு வாங்கிக்கொள்ளப் போகிறேன்.

யோகம்.—நீ சொல்லும் புடவைக்கு என்பது, நூறு விலையாகுமே.

ஞானம்.—தொண்ணூற்று ஐந்து ரூபாய்க்குக் குறையாதென்று ஐவுளிக் கடை பீதாம்பரய்யர் சொல்லி விட்டார்.

யோகம்.—ஞானம்! நீ சம்சாரியாயிற்றே. ஒரு புடவை இவ்வளவு விலையில் வாங்கிக் கொள்ளாவிட்டாலென்ன?

ஞானம்.—பட்டுப்புடவை கட்டிக்கொண்டால் புருஷாளுக்குச் சந்தோஷந்தான். வேறு நகை நட்டு பண்ணிக்கொள்ளத்தான் சக்தியில்லை. நல்ல புடவையாவது கட்டிக்கொள்ளவேண்டுமென்பதுதான் என் பிடிவாதம்.

யோகம்.—இதற்கு மட்டும் நூறு ரூபாய் எப்படிக் கிடைக்கும்?

ஞானம்.—அழுது ஆகாத்தியம் செய்து சாப்பிடாமல் பட்டினி கிடந்து நேற்றுத்தான் பணம் வாங்கிக் கொண்டேன்.

யோகம்.—நான் சொல்வதைக் கேள். நல்ல கதர் புடவை பத்துப் பன்னிரண்டு ரூபாயில் கிடைக்கிறது. இருபத்தைந்து ரூபாய்க்கு இரண்டு கதர் புடவை வாங்கிக்கொள். மீந்த பணத்தை ஏதேனும் நகை நட்டு செய்துகொள். நகையாயிருந்தால் ஆபத்து சம்பத்து இரண்டிற்கு முதவும்.

ஞானம்.—நீ மட்டும் கதர் கட்டிக்கொள்ளாமல் எனக்கு உபதேசம் செய்கிறாயே!

யோகம்.—அடி பைத்தியக்காரி. நான் இப்போது கட்டுவதெல்லாம் கதர்தானே. பட்டுப் பட்டாடைகளை எல்லாம் ஒழித்து விட்டேனே.

ஞானம்.—(கண்களில் ஜலம் ததும்ப) என்ன! நீ கட்டியிருப்பது கதர்புடவையா! நான் கராச்சி ஸில்கு என்றல்லவா எண்ணியிருந்தேன். நிறம் அதுபோலத்தானே இருக்கு. நீ என் இந்த முறப்பான புடவை கட்ட வேண்டும். நீயும் என்னைப்போல ஏழையா என்ன. தர்மாபுரத்திலிருந்தும் பெங்களூரிலிருந்தும் ஜரிகைக்கரையுள்ள புடவைகளை ஸ்பெஷலாகத் தயாரிக்கச் சொல்லி வரவழைத்துக் கட்டிக் கொள்வாயே? இந்தக் கதர் உன் இடுப்பில் எப்படி நிற்கிறது?

யோகம்.—ஞானம்பா! கோடீசுவரர் வீட்டுப் பெண்களுமிப்பொழுது கதருடுத்த ஆரம்பித்து விட்டார்களே. நான் எம்மாத்திரம். லோகமாதாவாகிய சீதையம்மன் காட்டுக்குச் செல்லும்பொழுது தானும் மரவுரி கட்டத் தயாரானாளே. நாம் அவளைக் காட்டிலும் சிறந்தவர்களா என்ன?

ஞானம்.—யோகாம்பா, எனக்கிவை எல்லாமொன்றுமே தெரியாதே. நீ கதர் கட்டும்பொழுது எனக்கென்ன பிரமாதம். நானும் இனிக்கதரையே கட்டிக் கொள்ளுகிறேன். எனக்கு தீபாவளியன்று கட்டிக்கொள்ள கதர்புடவை நீயே வாங்கிக்கொடு.

யோகம்.—"கதர் கட்டவேண்டியதற்கு இன்னம் பல காரணங்களுண்டு. எனக்குப் படிக்கத் தெரிவதால் நான் பத்திரிகைகளைப் படித்து விஷயங்களை யறிந்து கொள்கிறேன். ஒரு விஷயமும் தெரியாத நீ என் சொல்லைக் கேட்டு இவ்வளவு சீக்கிரம் கதர் கட்டத் தீர்மானித்தாயே! இதுதான் விசேஷம். சரி, நாழிகையாயிற்று. நான் வீடு சென்று சமையல் செய்ய வேண்டும். உனக்குக் கதர் புடவையைத் தீபாவளிக்குள் வரவழைத்துத் தருகிறேன்" என்று கூறி யோகம் தன் வீடு சென்றாள்.

லக்ஷ்மியம்மாள்.

# பகவான் ஏசுகிறிஸ்துவும் மகாத்மா காந்தியும்.

ஏசு நாதர்.

அறுசீர்கழில் நெடில் ஆசிரியம்.

பனி மழை தவழுஞ் சோலை பாலஸ்தீ னடிமை யாகி
உனதியும் புகழும் நீங்கி ரோமரின் ஆட்சிக் குள்ளாய்
அநிதியுங் கொடிய கோலும் அவனியை யழிக்கும் நாளில்
மனிதருக் குயிரை யீந்த மாதவன் "ஏசு" வந்தான். (க)

மகாத்மா காந்தி.

கலையறம் தவம் நல் யோகம் கறை யறு வீர மோங்கி
நிலைதரும் பாத நாட்டில் நிகரறு கொடுமை சூழ்ந்து
தலை விரித்தாடும் நாளில் சமரச முலகுக் கீவான்
மலைவறு மனத்தான் "காந்தி" வந்தவ தாரஞ் செய்தான். (௨)

ஏசு நாதர்.

"ஏசுவாம்" பெரியோன் முன்னுள் ஏழையர்க் கிரங்கி யென்றும்
ஆசறு முபேதசத்தா லன்பினு லருளாற் காத்தான்
நேசமே யுருவாய் வந்த நிலைதளர் எளிய ரந்த
ஈசனின் சுதனைச் சூழ்ந்தங் கின்பவா ரிதியி லாழ்ந்தார். (ங)

மகாத்மா காந்தி.

பாரத நாட்டி லந்தப் பண்ணவன் "காந்தி" கூறும்
சீரத உபதே சத்தைத் திருமுனி யுருவைத் தேடி
நீரதர் வழிகள் தாண்டி நிறைதரு குழுக் கொண் டீண்டி
பேரருள் பெறுவ சென்றும் பிணைதரு மன்பின் மன்னே. (ச)

ஏசு நாதர்.

ஆயிரக் கணக்காயன்னு ளன்பினுக் கடிமை யான
மாயிரும் "பலஸ்தீன்" மாந்தர் மறநெறிக் கெதிரி யாகி
தாயினுக் கருளும் மேலாம் தவத்தினுக் கறமுங் தந்த
நாயகன் "ஏசு" வாலே நற் கதிக் காளாய் நின்றார். (ரு)

மகாத்மா காந்தி.

பயத்தினு லறிவீ னத்தால் படைவலிப் பகைவர் தம்மால்
தூயத்தினர் தவனீ மானக் காந்தபல் கோடி மாந்தர்
ஜயத்தினுற் சிறந்த "காந்தி" திரு மொழி யெழுப்ப மீண்டும்
புயூத்தட மடித் தொன்றுகப் போர்களத் தெதிர்ந்து நின்றார். (சு)

ஏசு நாதர்.

மனிதருக் கிடையி லென்றும் மாய்ந்தழி யாத வாறு
துனியகல் கிளர்ச்சி யந்தத் தூயவன் "ஏசு" செய்தான்
உனதியும் படையும் கொண்ட "உரோமரி" ஞட்சி யன்னுள்
புனிதனில் கவனம் நீங்கிப் போக்கினில் விடுத்ததாலோ. (எ)

மகாத்மா காந்தி.

"காந்தி" மாதவனும் பன்னுள் கலக்க மெத் திசையு மோங்க
மார்தரி னுளத்தில் வீரம் வளர்த்திடப் புரிந்து வந்தான்
ஏந்திய படையும் நீதிக் கெதிர் வரும் முறையும் பூண்ட
வாய்ந்தவல் பகையும் சின்னுள் மதித்தில விடுத்து வைத்த. (அ)

ஏசு நாதர்.

சாந்தியும் அருளு மொன்ருய்த் தவங்கிடந் துதித்தோனுனை
ஏந்தலாம் "ஏசு" நாதன் எதிரிக ளெண்ண மோர்ந்து
ஆந்தரும் "கேத்ஸி மோனி" ல் அருளொடும் அமைதி யோடும்
தாந்தன துயிரை யீவான் தன் பகை வரவைப் பார்த்தான். (கூ)

மகாத்மா காந்தி.

அத்தகை யாக நங்க ளண்ணலாம் "காந்தி" நாதன்
சித்தனுப் பகைவர் கையில் சிக்குவ தறிந்தோனுகிச்
"சத்தியாக் கிர" மடத்தில் "சமர்மதிக் கரை" யில் தங்கி
எத்திசை யுலகும் போற்ற எதிர்வழி பார்த்து நின்ருன். (க0)

ஏசு நாதர்.

அண்டரும் நாரும் வாழ அவனியில் வந்தோ னுனை
எண்டரு புகழின் "ஏசு" எதிரிக ளளிப்பதான
தண்டனை யறிந்தோனுகி தன்னுள மகிழ்ந்து நின்ருன்
விண்டொடர் மதியங் கண்டவிரிதிரைக் கடலோ டொப்பான். (கக)

மகாத்மா காந்தி.

"காந்தியு" மந்த வாறே கதிர் வரக் கண்டதான
தேர்துனி பிளிற்று மின்பச் செய்யதா மரையை யொத்துப்
போர்த்தினி யடையப் போகும் புகழினுக் குளம் பூரித்தான்
ஏந்திய படைஞ ரெய்தும் எதிர்வழி பார்த்து மன்றே. (கஉ)

ஏசு, காந்தி.

எங்ஙனம் "ஏசு" நாதன் எய்திய நீதி மன்றில்
தங்கிய தலைவன் ஒன்றும் தப்பிதம் கண்டிலாறே
அங்ஙனம் "காந்தி" நாதன் அடைந்ததோர் நீதி மன்றில்
இங்கிவன் மீது குற்றமி லையெனப் புகழ்ந்து நின்ருன். (கங)

முடிவு.

ஏசு" வைக் கழுவி லேற்றி இரு நிலத் தென்று மீளா
நாசமுற் றழிந்த "ரோமர்" நவையினை யறிந்து மீண்டும்
ஆசறு "காந்தி" தன்னை யடைக்க ஆருண்டு செய்தார்
பேசுவ தென்னே யிந்தப் பித்துடை யுலகையம்மா (கூ)

பொது.

ஒவ்வொரு காலந் தன்னில் ஒவ்வொரு மனித னி
இவ்வுல கத்தில் வுந்திங் கேழையர்க் குதவி னுலும்
செவ்வையை யறியா மாந்தர் சிறுமதி யிகழ்ந்து நாளும்
திவ்விய புருடர் நாமம் செப்பி நாம் தொழுது மன்றே. (கரு)

வந்தே மாதரம்.

பா. ஆதிமூர்த்தி, காசி.



# சமாச்சாரக் குறிப்பு.

## முதற்பெண்!

பெண்மக்கள் தங்கட்குச் சட்டசபை அங்கத்தவராய் இருக்கும் உரிமை கொடுக்கப் படல் வேண்டுமென்று வாதாடும் இக்காலத்து, திருவாங்கூர் மகா இராணியார், டாக்டர் லுக்கோஸ் அம்மாள் அவர்களை அரசாங்க அங்கத்தவராய் திருவாங்கூர் சட்டசபையில் நியமனஞ்செய்தது போற்றத்தக்கது. மகா இராணியருக்கு ஆளும் உரிமை கிடைக்கவும் டாக்டர் லுக்கோஸ் அம்மாள் அவர்களை அரசாங்க டாக்டராக நியமனஞ் செய்தார். திருவாங்கூர் சட்டப்படி அரசாங்க டாக்டராய் இருப்பவரே மருத்துவ இலாக்காவிற்குத் தலைவராய் இருக்கவேண்டி யிருக்கின்றது. இப் பதவி வகிப்போரைத்தான் நாம் சென்னை மாகாணத்தில் சர்ஜன் ஜெனரல் என்று அழைக்கின்றோம். இந்தியாவில் மருத்துவ இலாக்காவிற்குத் தலைவராய் பெண் மக்களுள் முதல் முதலாய் இந்த அம்மையாரே நியமனஞ் செய்யப் பெற்றிருக்கின்றார். அன்றியும் இவரே இந்தியாவில் பெண்மக்களுள் முதல் சட்டசபை அங்கத்தவராகும். இவ் வம்மையார் நீடு வாழ்க. ஆளும் உரிமை பெற்றதும், ஒரு பெண்மணிக்கு இத்தகைய பெரும்பதவியை அளித்தமைக்காக மகாராணியார் அவர்களுக்கு நம் நெஞ்சுகந்த வந்தனத்தைச் செலுத்துகின்றோம்.

***

## துருக்கியில் பெண்மணிகளின் முன்னேற்றம்.

"டெயிலி நியூஸ்" என்னும் பத்திரிகையில் ஓர் பெண்மணி பின்வருமாறு எழுதுகிறார்:—

யுத்தத்தின் பயனாகத் துருக்கிப் பெண்மணிகளின் வாழ்க்கையில் ஏற்பட்டிருக்கும் மாறுதலைப்போல் உலகில் வேறெந்த நாட்டிலும் எந்த சமூகத்தினிடையேயும் மாறுதல் ஏற்படவில்லை. பதின்மூன்று ஆண்டுகளுக்குப் பின்னர் சென்ற செப்டம்பர் மாதத்தில் நான் மீண்டும் கான்ஸ்டாண்டிநோபிளை அடைந்தேன். இங்கு ஏற்பட்டிருக்கும் மாறுதல்களை

யெல்லாம் நன்கு ஆராய்ந்திருக்கிறேன். இனி, பெண்மக்களை அலட்சியஞ்செய்து துருக்கியில் எத்தகைய இயக்கமும் நடைபெற முடியாது. அரசியலிலும் பெண்மணிகளின் அபிப்பிராயத்துக்கு அதிகச் செல்வாக்கு ஏற்பட்டிருக்கிறது. சிலகாலத்திற்கு முன் வரையில் துருக்கிப் பெண்மணிகள் அந்தப்புரங்களில் சிறைப்படுத்தப்பட்டு, அலிகளால் காவல் புரியப்பட்டு, அடிமைகளாய் வாழ்ந்து வந்தனர். இன்றோ அவர்கள் தேச அரசியல் விஷயங்களில் தங்கள் செல்வாக்கை உபயோகித்து வருகின்றனர். வாக்குரிமைக்குப் போராடுவதற்காகப் பல நூறு அங்கத்தினர்களைக்கொண்ட ஒரு சங்கம் அமைத்துக் கொண்டிருக்கின்றனர். விவாகம், சொத்துரிமை முதலிய விஷயங்களில் ஆண்களுடன் சம சுதந்திரம் வேண்டுமென்று அவர்கள் போராடி வருகின்றனர்.

மகாயுத்தத்திற்கு முன்பு துருக்கியில் எந்தப் பெண்மணியும் ஒரு உத்தியோகத்திலும் அமர்ந்ததில்லை. ஆனால் இன்று மாதர் பலர் உபாத்திமைத் தொழிலில் புகழ்பெற்று விளங்குகின்றனர். வைத்திய கலாசாலைகளில் பல மாணவிகள் பயிற்சி பெறுகின்றனர். ஸ்டாம்போல் சர்வகலாசாலையில் ஆடவர்களுடன் சேர்ந்து பல நங்கைகள் கல்விகற்று வருகின்றனர்.

நகி ஹாநம் என்னும் மாதரார் பெண்களுக்கென்று தனியாக ஒரு பாடசாலை நடத்தி வருகின்றார். ஐரோப்பியர்களின் முறையைப் பின்பற்றாது இவர் தேசிய முறையில் இப்பாடசாலையை அமைத்துள்ளார். இவருக்குத் துருக்கியைத் தவிர வேறெந்த பாஷையிலும் பயிற்சியில்லை.

தற்காலம் பள்ளிக்கூடங்களில் படிக்கும் மாணவிகள் முகமூடி யணிந்த பயந்த சுபாவமுடைய சிறுமிகள் அவர்கள் பழைய காலத்து உடைகளைக் களைந்தெறிந்து விட்டனர். தேக வலிமையைத் தருவதற்கியைந்த பல விளையாட்டுகளில் அவர்கள் ஈடுபடுகின்றனர். பதினைந்து வயது வரையில் எல்லாச் சிறுமிகளும் பள்ளிக்கூடங்களுக்குச் செல்கின்றனர். விருப்பமிருந்தால் அதற்குப் பின்னரும் அவர்கள் பள்ளிக்கூடத்திற்குச் செல்லலாம். பொதுவாகக் கூறுமிடத்து ஒரு காலத்தில் இளைஞர்களுக்குரியவையாயிருந்த பல உரிமைகளும் இப்பொழுது சிறுமிகளுக்கும் அளிக்கப்பட்டிருக்கின்றன. பெண்மக்கள் உத்தியோகங்களிலில்லாத எந்தக் காரியாலயத்தையும் இப்பொழுதுகாண்பதரிது. கைத்தொழில் செய்து ஜீவனம் நடத்துவதின் பெருமையை துருக்கி மாதர் நன்கு உணர்ந்து கொண்டனர்.

முன்னால், தாய்நாட்டை விட்டு வெளிச் செல்வதற்குத் துருக்கிப் பெண்மணி எவரும் அனுமதிக்கப்படுவதில்லை. தற்பொழுது ஆண், பெண் அனைவரும் உலகில் எந்தப் பாகத்திற்கும் சென்று வரலாம். சமீபத்தில் வாஷிங்டனில் நடைபெற்ற ஸர்வதேசப் பெண்மணிகளின் மகாநாட்டிற்கு ஒரு துருக்கி மாது சென்று வந்தார். மற்றொருவர் லண்டனில் நடந்த மருத்தவ மாதர் மகாநாட்டிற்குச் சென்றிருந்தார். மற்றும் பல இளம் பெண்கள் அமெரிக்காவிலும் ஐரோப்பாவிலும் உள்ள பல நகரங்களில் கல்விப் பயிற்சி பெற்று வருகின்றனர்.

துருக்கியில் விடுதலை ஏணி தூக்கி நாட்டப் பட்டு விட்டது. பெண்மணிகள் ஒவ்வொரு படியாக ஏணியில் ஏறிவருகின்றனர். ஏணியின் உச்சியை அவர்கள் அடைந்து வெற்றியின் இன்பத்தை நுகருமாறு ஆண்டவன் அருள் புரிவானாக. நவசக்தி.

* *
*

### வீட்டுச் சண்டைத் தற்கொலையில் முடிந்தது.

திருவல்லிக்கேணி வெங்கடரங்கம் பிள்ளைத் தெருவில் வசித்து வந்த ஸி. டி. சாமய்யா என்னும் சாத்தானி ஜாதியைச் சேர்ந்த ஒரு வாலிப மனிதன் திடீரென இறந்து போன விஷயத்தைக் குறித்து மைலாப்பூர் போலீஸ் இன்ஸ்பெக்டர் மிஸ்டர் லோபஸ் ராயப்பேட்டை போலிஸ் ஸ்டேஷனில் சவ விசாரணை நடத்தினர். தற்கொலையின் விஷயங்களாவன. இறந்துபோன சாமய்யா சென்ற பிப்ரவரி மாதத்தில் திருவல்லிக்கேணி லேடி வில்லிங்க்டன் ட்ரெய்னிங் பாடசாலையில் படித்து வரும் கனகம்மாள் என்னும் பெண்ணை மணந்தார். வேலையில்லாமல் கஷ்டபட்டுக் கொண்டிருந்தமையால், சாமய்யா சென்ற ஜூலை மாதத்தில் கர்நூலுக்குச்சென்று அவ்விடமிருந்து நாளது மாதம் 3-ந்தேதியன்று சென்னைக்குத் திரும்பி வந்தார். ஏன் தனக்குக் கடிதம் எழுதவில்லை என்று தன் பெண்ஜாதியைக் கேட்கப் பெண்ஜாதி "நான் உன்னை லக்ஷியம் செய்ய வில்லை" என்று சொன்னாள். இம்மாதிரிச் சொன்னதாக பெண்ஜாதி வாக்குமூலத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. 5-ந் தேதி மாலையில் சாமய்யா தன் படத்தைப் பெண்ஜாதி கையில் கொடுத்துத் தான் வெளியேபோய் அடுத்த நாள் வருவதாகச் சொல்லிப் போனார். உடனே சாமய்யா கடலோரம் போய் அங்கே பாஷாணத்தை உட்கொண்டார். அதே இரவு சாமய்யாவை ராயப்பேட்டை ஆஸ்பத்திரிக்குக் கொண்டு வந்தனர். அவர் குணமடையாமல் நேற்றுக் காலையில் இறந்து போனார். இறந்து போவதற்கு முன் அவரிடமிருந்து ஒரு வாக்கு மூலம் வாங்கினார்கள். அதில் அவர் தன் பெண்ஜாதியினுடைய நடவடிக்கையைச் சகிக்காமலும் மேலும் தன்னை ஒவ்வொருவரும் துவேஷிப்பதனால் தான் தற்கொலை செய்து கொண்டு இறந்து போக எண்ணிப் பாஷாணத்தைப் புசித்ததாகச்சொன்னார். பின்னும் தன் உறவினருக் கெழுதிய கடிதங்களிலும் இதே மாதிரி எழுதப்பட்டிருந்தது. மேலும் தன் பெண்ஜாதி இன்னும் பள்ளிக்கூடத்திற்குப் போவது சரியல்ல வென்று சொல்லியும் பெண்ஜாதி கேட்கவில்லை யென்றும் சொல்லப்பட்டது. பஞ்சாயத்தார்கள் சாமய்யா பாஷாணம் உட்கொண்டு தற்கொலை செய்து கொண்டதாகச் சொல்லி அபிப்பிராயம் கொடுத்தனர்.— சுதேசமித்திரன் 16-10-24.

* * *

### நைசாமும் கதரும்.

கவியரசி சரோஜினி தேவி சமீபத்தில் நைசாம் அரசரின் அழைப்புக்கு இணங்கி, அவரது விருந்தாளியாகச் சென்றார். ஸ்ரீமதி சரோஜினி நைசாமுடன் பேசிக்கொண்டிருக்கையில், அவருக்கு இரண்டு கதராடைகள் அளிக்க, அரசர் அதனை அன்புடன் ஏற்றுக் கொண்டார். மறுநாள் தேவியார் அரசரைப் பார்க்கச் சென்ற பொழுது தாம் முன்னாள் கொடுத்த கதராடையை அரசர் அணிந்திருப்பதைக் கண்டு அளவற்ற மகிழ்ச்சி யடைந்தாராம்.

* * *

துருக்கியில், நியாமத்கானம் என்னும் சிறு பெண், பிரஞ்சு பாஷையிற் பேசுந் திறமையைக் கண்டு, 29 தேசப்பிரதிநிதிகளும் மெச்சி, அப்பெண்ணை மறுபடியும் லண்டனில் நடக்கப்போகிற மகா நாட்டுக்கு அழைத்திருக்கிறார்கள்.

* * *

ஸ்ரீமதி சாரளா தேவி சௌத்ராணி சிந்துப் பிரதேச வெள்ளக் கஷ்ட நிவாரண நிதிக்கு ரூபா 1500-0-0 ஸ்திரீகளிட மிருந்து வசூல செய்திருக்கிறார்.

* * *

சட்டசபைக்கு வாக்குக் கொடுக்கும் உரிமையும், அபேட்சகர்களாக நிற்கும் உரிமையும் பெண்களுக்கு அளிக்கப்பட வேண்டுமென்று அஸ்ஸாம் சட்டசபை தீர்மானித்திருக்கிறது.

* * *

துருக்கியில் சமீபத்திற்கு பட்டம் பெற்றவர்களுள் 3 பெண் வக்கீல்களும் இருப்பதாகச் சொல்லப்படுகின்றது.

* * *

கல்கத்தாவில் சில தினங்களுக்கு முன் பெண்களின் கூட்டம் ஒன்று கூடியபொழுது ஆசாரியர் பிரபலசந்திர ராயர் அங்கு ஓர் இடத்தில் உட்கார்ந்துகொண்டு, ராட்டினத்

தில் நால் நூற்றுக் கொண்டிருந்தாராம்; அதனைக் கண்ட பலர் அவரைப் பின்பற்றத் தொடங்கி விட்டார்களாம்.

* * *

### நாகப்பட்டணம் தாலுக்கா போர்டு.

பசுக்கொலை செய்வதை நியத்தத் தீர்மானம்.

நாகப்பட்டணம் தாலுக்காபோர்டின் கூட்டம் ஒன்று போன செப்டம்பர் மாதம் திருவாளர் வி. ஹமீது சுல்தான் மரைக்காயர், எம்.எல்.சி., அவர்களது தலைமையின் கீழ் நடைபெற்றபோது, தாலுக்கா போர்டு எல்லைக்குள்ளடங்கிய இடங்களில் பசுக் கொலை செய்வதை நிறுத்த வேண்டுமென்று ஸ்தல ஸ்தாபன ஆக்டைத் திருத்த வேண்டுமென்று அரசாங்கத்தைக் கேட்டுக் கொள்ளுவதாக திருவாளர் ஜி. ராமையாநாயுடு ஒரு தீர்மானம் கொண்டு வந்தார். அந்தத் தீர்மானம் ஏகமனதாக நிறைவேறிற்று.

* * *

### காந்தி சேவ சங்கம்.

கும்பகோணத்திலிருக்கும் இச்சங்கத்தார் சியாழித் தாலூக்காவிலுள்ள வெள்ளக்கஷ்டங்களை நிவர்த்திக்கும் பொருட்டு தமது நிதியிலிருந்து இரண்டாயிரம் ரூபா உபகரித்திருக்கிறார்கள்.

* * *

## புத்தக மதிப்புரை.

தேவாங்க மித்திரன் :—ஆசிரியர் ஆர். நாராயணஸ்வாமி செட்டியார் அவர்கள். வருஷ சந்தா உள்நாடு ரூ. 2-0-0 வெளி நாடு ரூ. 3-0-0. குலாபிமானிகளுக்கு வருஷ சந்தா ரூ. 10-0-0.

தேவாங்க சமூகத்தியவர்களுடைய அபிவிருத்தியை உத்தேசித்து இப்பத்திரிகை வெளி வருவதுபற்றி அச்சமூகத்தினர் இப்பத்திரிகையை ஆதரித்தல் முக்கியம். ஒவ்வொருவரும் தமது சமூகத்தின் முன்னேற்றத்தைக் கருதும் போது பிற சமூகத்திய க்ஷேமலாபங்களைக் கவனித்தால் மட்டுமே இந்தியர்களென்ற தலைப்பினகீழ் ஒற்றுமையுடன் வாழக்கூடும் என்ற உண்மையை அறிந்து இப்பத்திரிகை வெளி வருவதால் எல்லா சமூகத்தினரும் தேவாங்க மித்திரனால் நன்மையடையக் கூடுமென்பதில்தடையில்லை. வேண்டுவோர் மானேஜர், தேவாங்க மித்திரன், தேவாரம, மதுரை ஜில்லா என்றெழுதவும்.

கம்ம நண்பன் :— இப்பெயர் கொண்ட மாத மிருமுறைப் பத்திரிகை வரப் பெற்றோம். இப்பத்திரிகை தனது பெயருக்கேற்றதன் சமூகத்தினருக்கு ஊழியம் செய்வதுடன் அவசியமானன அரசியல் விஷயங்களிலும் பற்றுள்ளதாகக் காணப்படுகிறது. வருஷசந்தா ரூ.2-0-0. வேண்டுவோர் மானேஜர், கம்ம நண்பன், திருத்தங்கல், என்றெழுதிப் பெற்றுக்கொள்ளலாம்.

இந்தியன் :—இலங்கை வாழ் இந்தியரின் அபிவிருத்தி நாடி வெளிவரும் வாரம் மும்முறைப் பத்திரிகை. வேண்டுவோர் மானேஜர், இந்தியன், ஸ்லேவ் ஐலண்டு, கொழும்பு, என்று எழுதவும்.

ஆர்யமத சம்வர்த்தனி :— ஆசிரியர் கடலங்குடி ஸ்ரீமான் நடேச சாஸ்திரிகள் அவர்கள். வருஷ சந்தா ரூ. 6-0-0. தனிப்பிரதி அணா 10.

இப்பத்திரிகை சாதாரண மாதப் பத்திரிகைகள் போலல்லாது வடமொழி சுலோகங்களும் தென் மொழியில் அதற்கு அர்த்தத்துடனும் வெளியாகிறது. சோதிட வடமொழி நூல்களில் சிகரம் போன்ற பிருகஜ் ஜாதகத்தின் பொருளை யனைவரும் சுலபமாயறிந்துகொள்ளும்படிக்கும் சூரிய நமஸ்கார மந்திரங்களின் கருத்தை யறிந்து கொள்ளும்படிக்கும் தெளிவாயெழுதப்பட்டிருக்கிறது. தேவநாகரிலிபியில் சுலோகங்களும் எளிய தமிழ் மொழியில் அதற்கு விரிவான அர்த்தமும் எழுதப்பட்டிருப்பதால் இச்சஞ்சிகை ஆண் பெண் இருபாலர்க்கும் சோதிடபாவம் தெரிந்து கொள்ள விரும்புவோர்களுக்கும் ஏற்ற சாதனமாக விருக்கிறது. சாங்கியதத்துவ கௌமுதி, பிருகஜ்ஜாதகம், நவக்ருஹாராதனம் இவைகளைத் தொடர்ச்சியாக வெளியிடும் இப்பத்திரிகை ஆஸ்திகர்கள் ஒவ்வொருவர் கையிலு மிருக்கத்தக்கது.

வேண்டுவோர் மானேஜர், ஆர்யமத சம்வர்த்தனி, 19, வல்லபா அக்ரஹாரம், திருவல்லிக்

ரேகணி, மதராஸ், என்றெழுதிப் பெற்றுக்கொள்ளவும்.

தீனபந்து:—ஆசிரியர் ஸ்ரீமான் எல். இ. பெட்போர்ட், பி.ஏ., எல்.டி., வருஷ சந்தா. ரூ. 4. இப்பத்திரிகை ஒடுக்கப்பட்ட இந்திய சகோதரர்களின் நிலைமை, தேவை இரண்டையும் எடுத்துரைக்கும் சிறந்த தமிழ் வாரப்பத்திரிகையாகும். சமூக முன்னேற்றத்திற்குத் தாய் நாட்டில் அன்பும் அரசியற்றுறையில் ஆர்வமும் மற்ற வகுப்பினர்களின் க்ஷேமலாப ஆராய்ச்சியும் அவசியமென்பதை நன்குணர்ந்து நடைபெறும் தீனபந்துவை ஆதரித்தல் எல்லா சமூகத்தினர்க்கும் ஏற்ற கடமையாகும். வேண்டுவோர் தீனபந்து ஆபீஸ், வேலூர், வடஆற்காடு, என்று எழுதிப் பெற்றுக்கொள்ளவும்.

---



---



## பொதுஜன மித்திரன்.

இப் பெயர்கொண்ட வார மிருமுறைப் பத்திரிகை சிங்கப்பூரிலுள்ள 48, ராபின்சன் ரோட்டினின்று வெளியாகின்றது. இதன் ஆசிரியர் ஸ்ரீமான் திரு. ச. நடேசன் ஆவர். இவர் ஆங்கிலம் தமிழ்ப் பாஷைகளில் தேர்ச்சி பெற்றவர். இதன் பிரசுரகர்த்தர்கள் ஜிட்ஸ் அண்டு கம்பெனியார் ஆவர். மலாய் நாடுகளில் நிலவிவரும் தமிழ்ப் பத்திரிகைகளில் இது சிறந்ததென்றே கூறலாம். காங்கிரஸ் கொள்கையையே இது தழுவியதாய் இருக்கிறது. மலாய் நாடுகளிலுள்ள இந்தியர்களுக்குப் பெரிதும் பயன்படும். இதன் ஒரு பிரதி விலை 5 காசு.